ஸ்ரீ ராமஜயம்

# தசா புக்திகளும்

# ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்

## (ஸ்தோத்திர மாலையுடன்)

ஸங்கீத விமர்சகாசார்ய,
அபிநவ தியாக ப்ரம்ம, கீர்த்தனாசார்ய

**ஸ்ரீ உ. வே. C. F. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்**

அவர்களுடைய வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பிலிருந்து
தொகுக்கப்பெற்று

அம்ருதவாக்வர்ஷி, உபந்யாஸக சக்ரவர்த்தி, வைதிக தர்மஸம்ரக்ஷக, ப்ரவசன துரீண, வேதயாக பரிபாலக, ராமாயண தத்வ உபதேசக, ராமாயண கேஸரி, பாரதஸிம்ஹம், தர்மோபதேச வாசஸ்பதி, யக்ஞரக்ஷக

**சேங்காலிபுரம் ப்ரஹ்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்**

அவர்கள் ஆசியுரையுடன் கூடியது.




பதிப்பகத்தார் :

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,**
சென்னை-17.

சென்னையில் விற்பனை ஏஜெண்டுகள் :

எம். தாமோதரம் & கம்பெனி,
அப்பா பில்டிங்ஸ், 9/286, எஸ்பிளனேட், சென்னை-1.

B

[விலை ரூ. 2/-

முதற் பதிப்பு : 1960.

# பொருளடக்கம்

பக்கம்

ஸ்தோத்திர மாலை (தொடர்ச்சி) :

# ஆசியுரை



அம்ருதவாக்வர்ஷி, உபந்யாஸக சக்ரவர்த்தி,
வைதிக தர்மஸம்ரக்ஷக,
ப்ரவசன துரீண, வேதயாக பரிபாலக,
ராமாயண தத்வ உபதேசக,
ராமாயண கேஸரி, பாரதஸிம்ஹம்,
தர்மோபதேச வாசஸ்பதி, யக்ஞரக்ஷக

**சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்,**
25, வடக்கு மரவனேரி, சேலம்-1.

*(Camp)* சென்னை.
26-9-1960.

ஸ்ரீ பகவான் ராமகிருஷ்ணுதிகளாய் இவ்வுலகில் அவதாரம் செய்ததால் நவக்ரஹங்களின் அனுக்ரஹத்தை விரும்புகிறவராகவும், அவற்றிற்குக் கட்டுப்பட்டுள்ளவராகவும் இருக்கின்றார். அதனாலேயே ஸ்ரீ ராமன் முதலியவர்களுக்கு நக்ஷத்திரம், லக்னம் முதலியவற்றை முனிவர்கள் கூறியுள்ளனர். இப்படித் தெய்வத்திற்கே நவக்ரஹங்களின் உதவி தேவையென்றால் மனிதர்களான நம் யாவருக்கும் நவக்ரஹ ப்ரஸாதம் மிக்க அவசியமேயன்றோ! அந்த நவக்ரஹங்களின் அனுக்ரஹம் அடைவதற்கு மார்க்கத்தைக் கருணமூர்த்தியான ஸ்ரீ பரமேச்வரன் ஸ்ரீ பார்வதி தேவிக்கு உபதேசம் செய்திருப்பதாய் உமாஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. அதுவும், ஸம்ஸாரிகளான நமக்கு சுலபமாய் நவக்ரஹ தோஷங்கள் விலகி, ஆயுஸ், ஆரோக்யம், ஸந்தானம், ஸம்பத்து முதலிய மங்களங்களை அளிப்பதாக அமைந்துள்ளது. இம்முறையை உலகத்திலுள்ள யாவரும் அறிந்துகொள்வதற்காக, லிட்டில் ப்ளவர் கம்பெனியார் வெகு அழகான முறையில் சிறு குழந்தைகள், ஸ்திரீகள், பெரியவர்கள் யாவரும் நித்யம் பாராயணம் செய்யும்படி, **"தசா புக்திகளும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்"** என்ற ஒன்பது புஸ்தகங்களையும் **"ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்"** என்ற புஸ்தகத்தையும் அச்சிட்டு வெளியிட்டுள்ளனர்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் நவக்ரஹ தோஷங்களைப் போக்கி, ஸகல பாக்யங்களையும் கொடுக்கக்கூடிய, பல ஸர்க்கங்கள் அமைந்

துள்ளன. எந்த எந்த தசைக்கு, எந்த எந்த ஸர்க்கத்தின் கதையை உணரவேண்டுமோ, எந்த எந்த தசைகளின் புக்திகளின் தோஷங்களை விலக்கிக்கொள்ள எந்த எந்த ஸர்க்கத்தின் கதையை உணரவேண்டுமோ, அந்த அந்த ஸர்க்கங்களின் கதையை எளிய நடையில் தமிழில் இக்கம்பெனியார் அச்சிட்டளித்தது நமது தென்னாட்டின் பாக்யமேயாகும்.

இதோடு அந்த அந்த ஸர்க்கத்தின் ஆரம்ப சுலோகத்தையும் முடிவு சுலோகத்தையும் ஒவ்வொரு ஸர்க்கத்திலும் சேர்த்து அச்சிட்டிருக்கின்றனர். அவ்விரண்டு சுலோகங்களையும் படிப்பதால் அந்த ஸர்க்கம் முழுவதையும் படித்த பயன் ஏற்படும். அந்த ஸர்க்கத்தின் அர்த்தத்தை ஸ்ரீ ராமனிடத்தில் அளவு கடந்த பக்தி உள்ளவரும், ஸ்ரீ ராமாயணத்தின் உட்கருத்தை வெகு எளிய நடையில் எழுதியவருமான அபிநவ தியாக ப்ரம்ம, கீர்த்தனாசார்ய ஸ்ரீ C. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்கள் மொழிபெயர்த்தபடி வெளியிட்டுள்ளனர்.

அதோடு "ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்" என்ற ஒரு சிறந்த புஸ்தகத்தையும் இக்கம்பெனியார் வெளியிட்டுள்ளனர். இதுவும் ஒவ்வொரு குடும்பத்திற்கும் ரக்ஷையாக இருக்கும்.

இப்புஸ்தகங்களில் பல ஸ்தோத்ரங்களையும் பல தெய்வங்களின் அஷ்டோத்தரங்களையும் நாமாவளிகளையும் சேர்த்து அச்சிட்டுள்ளனர். பக்தர்களுக்கு இதுவும் ஒரு பெரிய லாபமாகும்.

**இவைகளைப் படிப்பதால் நவக்ரஹ ப்ரஸாதமும், ஸ்ரீ ராமனுடைய ப்ரஸாதமும், ஸர்வதேவதா ப்ரஸாதமும் கிடைப்பது நிச்சயம்.**

ஆஸ்திகர்கள் அனைவரும் இப்புஸ்தகங்களை வாங்கி இக்கம்பெனியாருக்கு இம்மாதிரி இன்னும் பல புஸ்தகங்களை வெளியிட உத்ஸாஹத்தை உண்டுபண்ணும்படி கேட்டுக்கொள்கிறேன்.

இப்படிக்கு,

**சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்.**



ஸ்ரீராமஜயம்

# ஜாதகக் குறிப்பு

(இதில் தம்முடைய ஜாதகத்தை எழுதி வைத்துக்கொள்ளவும்)

பெயர்: ஸ்ரீ/ஸ்ரீமதி

பிறந்த ஊர் அக்ஷாம்சம்

வருஷம் மீ தேதிக்குச்

சரியான இங்கிலீஷ் ( ) கிழமை

சுக்ல/கிருஷ்ண பக்ஷ திதி நக்ஷத்திரம்

கூடிய சுப தினத்தில் சூரிய உதயாதி நாழிகை

விநாடி க்கு (at A.M./P.M.) சுப ஜனனம்.

ஜந்ம நக்ஷத்திரம் பாதம்

ஜந்ம ராசி ஜந்ம லக்னம்

## கிரக பாத சாரங்கள்

சூரியன் சுக்கிரன்

சந்திரன் சனி

அங்காரகன் ராகு

புதன்

குரு லக்னம்

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | ராசி சக்கரம் | | |
| | | | |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | நவாம்ச சக்கரம் | | |
| | | | |
| | | | |

ஜனன காலத்தில் மகா தசையில்

சென்றது போக இருப்பு வரு மீ நாள்

# சந்திர தசை, புக்திகளில்

# ஸ்ரீமத் ராமாயண ஸர்க்க பாராயண முறை

(இதில் தமக்கு நடக்கும் தசை, புக்தி காலங்களை எழுதி வைத்துக்கொள்ளவும்)

| ரிசை ரண் | தசை (அ) புக்தி | தசை (அ) புக்தி நடக்கும் காலம் | தசை (அ) புக்தி எந்தத் தேதியிலிருந்து எந்தத் தேதிவரை நடைபெறும் | | பாராயணம் செய்யவேண்டிய | | | பாராயண முடிவில் நிவேதனப் பொருள்* |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | காண்டம் | ஸர்க்கம் (அ) ஸர்க்கங்கள் | பக்க எண் | |
| | சந்திர தசை | வரு மீ நா. 10 0 0 | | | ஸுந். | 5 | 1 | பால் |
| 1 | சந்திர புக்தி | 0 10 0 | | | உத்த. | 53,54 | 5 | பால் |
| 2 | குஜ பு. | 0 7 0 | | | பால. | 19,20 21,22 | 9 | சர்க்கரைப் பொங்கல் |
| 3 | ராகு பு. | 1 6 0 | | | ,, | 49 | 18 | தேன் |
| 4 | குரு பு. | 1 4 0 | | | ,, | 1 | 20 | வாழைப் பழம் |
| 5 | சனி பு. | 1 7 0 | | | ஆர. | 30 | 33 | நாவல் பழம் |
| 6 | புத பு. | 1 5 0 | | | அயோ. | 26,27 28,29 30 | 37 | திராட்சைப் பழம் |
| 7 | கேது பு. | 0 7 0 | | | ஆர. | 6 | 57 | தேங்காய் |
| 8 | சுக்கிர பு. | 1 8 0 | | | யுத்த. | 121 | 61 | கற்கண்டு |
| 9 | சூரிய பு. | 0 6 0 | | | கிஷ். | 3 | 65 | கரும்பு |

*குறிப்பு: பாராயண ஆரம்பத்தில் எல்லா புக்திகளிலும் பொதுவாகப் பால் நிவேதனம் செய்து, பாராயண முடிவில் மேற்கண்ட பொருள்களை நிவேதனம் செய்யவேண்டும். குறிப்பிட்ட பொருள் கிடைக்காவிட்டால், 5 வாழைப்பழங்களையாவது அல்லது கிடைத்த பழங்களையாவது நிவேதனம் செய்யவேண்டும்.

ஸ்ரீ ராமசந்த்ராய நம:

# ஸ்ரீ ராமர் ஜாதகம்

ததஶ்ச த்வாதஶே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ |
நக்ஷத்ரே(அ)திதி தைவத்யே ஸ்வோச்ச ஸம்ஸ்த்தேஷு
பஞ்சஸு ||
க்ரஹேஷு கர்க்கடே லக்நே வாக்பதா விந்துநா ஸஹ |
ப்ரோத்யமாநே ஜகந்நாதம் ஸர்வலோக நமஸ்க்ருதம் ||
கௌஸல்யா (அ) ஜநயத் ராமம் ஸர்வலக்ஷண ஸம்யுதம் ||

— ஸ்ரீ வால்மீகி ராமாயணம்

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | ராசி சக்கரம் | | லக்னம் குரு சந்திரன் |
| செவ்வாய் | | | |
| ராகு | | சனி | |

" ஆயிடைப் பருவம் வந்(து) அடைந்த எல்லையின்
மாயிரு புவிமகள் மகிழ்வின் ஓங்கிட
வேய்புனர் பூசமும் விண்ணு ளோர்புகழ்
தூயகர்க் கடகமும் எழுந்து துள்ளவே."

— கம்ப ராமாயணம்

ஸ்ரீய: பதியான பகவான் ஸ்ரீமந் நாராயணனுடைய அவதாரங்களில் முக்கியமானது ஸ்ரீராமாவதாரம். ஸ்ரீராமபிரானுடைய ஜனன ஜாதகத்தில் ஐந்து க்ரஹங்கள் உச்ச ஸ்தானத்தில் இருக்கின்றன. எனவே, இந்த மஹா சிரேஷ்டமான ஜாதகத்தைப் பூஜா மண்டபத்தில் எழுந்தருளப்பண்ணி, தினந் தோறும், சிரத்தையுடன் ஆராதிப்பது அவசியம். இந்தப் புனிதமான ஜாதகத்தை வைத்திருப்பவர்களுக்கும், பூஜிப்பவர்களுக்கும், ஜாதக ரீதியாய் ஏற்பட்டிருக்கும் நவக்ரஹ தோஷ நிவிருத்தியும், ஸர்வ வ்யாதி நிவிருத்தியும், ஐசுவர்ய அபிவிருத்தியும், ஆயுள், ஆரோக்யம் முதலான ஸகல பாக்ய அபிவிருத்திகளும் ஸ்ரீ சக்கரவர்த்தித் திருமகன் திருவருளால் திண்ணமாக ஏற்படும் என்பது ஸர்வ சாஸ்த்ர ஸம்மதம்.

Pages (i) to (viii) and 1 to 68 : Printed at Maruthy Press, Madras-14.



अभ्यषिञ्चन्नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना ।
सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा ॥

LITERARY PRESS, SALEM-1.

# பதிப்பாசிரியரின் முன்னுரை

## [ஸ்ரீமத் ராமாயண பாராயணம் செய்வதனால் நவக்கிரஹங்கள் பிரீதி அடைகின்றன]

## கிரஹமாவது யாது?

'கிரஹம்' என்னும் ஸம்ஸ்கிருதச் சொல்லுக்கு 'ஆகர்ஷிப்பது' அல்லது 'பற்றி இழுப்பது' என்று பொருள். 'எது எதைப் பற்றிக் கொண்டு இழுக்கிறது?' என்பது கேள்வி. சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என்பவை நவக்கிரஹங்கள். அவை வானத்தில் தனித் தனியே திகழ்ந்து வருகின்றன. ஊசி போன்ற பொருள்களைக் காந்தம் எங்ஙனம் தன்னிடம் இழுக்கின்றதோ, அங்ஙனமே நவக்கிரஹங்களும் தங்களுக்கே உரித்தான ஆகர்ஷண சக்தியின் வாயிலாக வாழ்க்கையில் ஏற்பட வேண்டிய சுக துக்கங்களுக்கு அடிப்படையாக அமைந் துள்ள மனிதனின் மனநிலையைத் தங்கள் ஆதீனத்துக்குப் பணியுமாறு ஆகர்ஷித்து அதற்கேற்றவாறு செயல் புரியச் செய்கின்றன. இவ்விதமாக மனித வர்க்கத்தை நவக்கிரஹங்கள் ஆட்டி வைக்கின்றன. எனவே, மனிதனு டைய ஒவ்வொரு செயலும் அசைவும் நவக்கிரஹங்க ளின் ஆட்சிக்கு உட்பட்டே நடைபெறுகின்றன என்று நம் முன்னோர்கள் நிச்சயித்திருக்கிறார்கள்.

கிரஹங்கள் என்பவை யாவை? உலகத்தைப் படைத்துக் காத்து அழித்துவரும் பரம்பொருள் ஒன்று இருக்க, நவக்கிரஹங்களுக்கு அவசியம் என்ன? இந்தக் கேள்விக்குத் தக்க விடை கூறத்தான் வேண்டும். இல்லா விட்டால் கிரஹங்களையும், அவற்றின் முக்கியத்துவத்தை யும் சக்தியையும் சிலர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பின்வரும் உதாரணத்தினால் கிரஹங்களின் முக்கியத் துவத்தை விளக்கலாம்.

நம் பாரத தேசம் ஒரு பெரிய நாடு. இதில் இப்பொழுது பல ராஜ்யங்கள் இருக்கின்றன. இந்த ராஜ் யங்கள் அனைத்தின் நிர்வாகத்துக்கும் ராஷ்டிரபதிதான் பொறுப்பாளி. அவரே எல்லாவித அதிகாரங்களும்

பெற்றவர். எனினும், இந்த ராஜ்யங்களில் நடக்கும் ஒவ்வொரு செயலேயும் அவர் ஒருவரே நேராகக் கண் காணித்து ஆட்சி நடத்த முடியுமா? முடியாதன்றே? அதற் காக அவர் கவர்னர் என்ற ஓர் அதிகாரியை ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் தம்முடைய பிரதிநிதியாக நியமித்திருக் கிருர். அப்படிப்பட்ட கவர்னர்களின்மூலம் ஒவ்வொரு ராஜ்யத்திலும் ராஷ்டிரபதி செயலாற்றுகிருர்.

அம்மாதிரியே 'மனித சரீரம்' என்ற தேசத்துக்கு, ஸகலலோக நாயகரான பரம்பொருளே தலைவராலும், அந்தச் சரீரத்திலுள்ள ஒவ்வொரு பாகத்திற்கும் ஒவ் வொரு கிரஹத்தை அவர் அதிகாரியாக நியமித்திருக் கிருர். இவ்விதம் அதிகாரிகளாக நியமிக்கப்பட்டிருக்கும் கிரஹங்கள், அந்த அந்த மனிதன் முன் ஜன்மங்களில் செய்த வினையை (கர்மாவை) அநுசரித்து, அதற்குத் தகுந்த பலன்களைத் தத்தம் தசாபுக்திகள் நடக்கும் பொழுது கொடுத்து வருகின்றன. ஒவ்வொரு தேகத்தி லும் உள்ள ஆத்மா, மனம், பலம், வாக்கு, ஞானம், காமம், துக்கம் முதலியவற்றுக்கெல்லாம் ஒவ்வொரு கிரஹம் அதிகாரியாக நியமிக்கப்பட்டிருக்கிறது. ஆத்மா, மனம், பலம், வாக்கு, ஞானம், காமம், துக்கம் என்பவற்றைத் தவிர, எலும்பு, இரத்தம், மூளை, தோல், தசை, இந்திரியம், நரம்பு முதலிய பொருள்களும் நம் சரீரத் தில் இருக்கின்றன. ஆகையால், சூரியன் முதலியவை கீழ்க்காணும் விதமாக நம் தேகத்திலுள்ள அங்கங்களில் இடம் பெற்றிருக்கின்றன:

**சூரியன்:** ஆத்மா, எலும்பு—பிதா.

**சந்திரன்:** மனம், இரத்தம்—மாதா.

**செவ்வாய், ராகு:** பலம், மஜ்ஜை (*marrow*)—சகோதரர்கள்.

**புதன்:** வாக்கு, தோல்—தாய் மாமன்.

**குரு:** ஞானம், தசை, மாமிசம்—புத்திரர்கள்.

**சுக்கிரன்:** காமம், இந்திரியம்—மனைவி.

**சனி, கேது:** துக்கம், நரம்புத் தசை—மரணம்.

மேற்கண்ட அட்டவணையில் உள்ளபடி, ஒரு மனி தன் பூர்வ ஜன்மத்தில் புண்ணியம் செய்தவஞ, அவன் எலும்பு பலமுள்ளதா, தந்தை நல்லவரா, கெட்டவரா, அவர் நீண்ட நாட்கள் இருப்பாரா என்பவை போன்ற

விஷயங்களையெல்லாம் அவனவனுடைய ஜாதகத்தில் சூரியன் இருக்கும் நிலையை அநுசரித்துச் சொல்லக்கூடும்.

அவ்விதமே ஒரு ஜாதகன் சுத்தமான மனம் உடையவனு, அவனது இரத்தம் சுத்தமானதா, அவனுடைய தாய் சுகமாக நீண்ட நாள் வாழ்வாளா என்பன போன்ற விஷயங்களைச் சந்திரன் நிலையைப் பார்த்து அறிய வேண்டும். இவ்விதமே மற்ற விஷயங்களையும், ஒவ்வொன்றுக்கும் உரிய கிரஹங்களின் நிலையைக் கொண்டு, நிர்ணயிக்க வேண்டும்.

எனவே, நம் உடலிலுள்ள இரத்தம், மாமிசம், எலும்பு முதலியவையெல்லாம் அந்த அந்தக் கிரஹங்களின் அம்சங்கள் என்பது மேலே தந்துள்ள அட்டவணையால் தெரிகிறது.

எங்கோ ஆயிரக்கணக்கான மைல் தூரத்துக்கு அப்பாலுள்ள கிரஹங்கள் மனிதனின் சுகதுக்கங்களுக்கு எப்படிக் காரணமாகின்றன என்று பிரமிக்க வேண்டியதில்லை. நம் உடலும், உடலைச் சேர்ந்த தசை, இரத்தம், எலும்பு போன்ற உருவமுள்ள பாகங்களும், உருவமில்லாத ஆத்மா, மனம், புத்தி, காமம் போன்றவையும், கிரஹங்களின் அம்சங்களே—அதாவது கிரஹங்களெல்லாம் நம் உடலிலேயே குடிகொண்டிருக்கின்றன—என்பது கவனிக்கத்தக்கதாம்.

மேற்கண்டபடி நம் உடலோடு தொடர்பு கொண்டுள்ள கிரஹங்களைத் திருப்தி செய்விப்பதற்காகவும், உடலில் அந்த அந்தப் பாகங்களை வலிமைப்படுத்தவும் அந்த அந்தக் கிரஹங்களுக்கு உரிய நெல், துவரை, எள் முதலிய தானியங்களை நாள்தோறும் உபயோகித்து வருகிறோம். சனிக்கிழமையன்று சனிக் கிரஹத்தைத் திருப்தி செய்வித்து, அதன்மூலம் நீண்ட ஆயுளையடைய நல்லெண்ணெய் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று நம் பெரியோர் வழக்கப்படுத்தியிருக்கிறார்கள். "சனி நீராடு" என்பது பெரியோர் வாக்கு.

இவற்றையெல்லாம் கவனித்தால் நம் உணவு, உடை, செயல், சேவை போன்ற எல்லாவற்றையும் நம்மை அறியாமலே கிரஹங்களின் பிரீதிக்காக நாம் செய்து வருகிறோம் என்பது விளங்கும். ஆகையால், கிரஹங்கள் நம் தினசரி வாழ்க்கையில் நம்முடன் ஒன்றியிருக்கின்றன என்பது கண்கூடாகும்.

## கிரஹங்களும் வினைப்பயனும்

ஆதிபரம்பொருளின் படைப்பில் எத்தனையோ லக்ஷம் ஜீவராசிகள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமான சரீர அமைப்பும் வெவ்வேறு விதமான செயற்பாடுகளும், பல வேறு விதமான கோரிக்கைகளும், தகுந்த முயற்சிகளும், முரண்பாடுகளும் உள்ளன. இந்த ஜீவராசிகளில் தேவர், மனிதர், மிருகங்கள், பறவைகள், கிருமிகள் முதலிய எல்லாம் அடங்குகின்றன. பிரம்ம லோகம் முதலாகப் பாதாள லோகம் வரையிலுள்ள பதினான்கு உலகங்களும், அவற்றிலுள்ள ஜீவராசிகளும், ஜடப்பொருள்களும் படைப்பில் சேருகின்றன. இந்தப் படைப்பு ஒன்றுக்கொன்று இவ்வளவு வித்தியாசமாக இருக்கக் காரணம் என்ன? இதற்குக் காரணம், அந்த அந்த ஜீவாத்மா செய்த முன்வினையே என்பர் நம் பெரியோர்.

இப்போது நாம் மற்ற ஜீவராசிகளையெல்லாம் விட்டுப் பூவுலகிலுள்ள மனிதவர்க்கத்தை மாத்திரம் எடுத்துக்கொள்வோம். ஆஹா! மனிதர்களில் எவ்வளவு, எவ்வளவு, வித்தியாசம்!

ஒருவன் பணக்காரன்—இன்னொருவன் ஏழை.
ஒருவன் அறிவாளி—இன்னொருவன் மூடன்.
ஒருவன் சிவப்பு—இன்னொருவன் கறுப்பு.
ஒருவன் நெட்டை—இன்னொருவன் குட்டை.
ஒருவர் ஆண்—இன்னொருவர் பெண்.
ஒருவனுக்கு ஒரு கண் இல்லை—இன்னொருவனுக்கு இரண்டு கண்ணும் இல்லை.
ஒருவன் செவிடன்—இன்னொருவன் ஊமை.
ஒருவன் நொண்டி—இன்னொருவன் கூனன்.
ஒருவன் உடல் பருத்தவன்—இன்னொருவன் உடல் இளைத்தவன்.

இப்படி மனிதர்களிடையே எவ்வளவோ முரண்பாடுகள் உள்ளன.

இத்தகைய முரண்பாடுகள் எல்லாம் ஒருவருக்கு ஒருவர் சம்பந்தமில்லாதவர்களுக்கு மாத்திரந்தானே என்று நினைக்க வேண்டாம். ஒரே தாயின் வயிற்றில் பிறந்த பிள்ளைகளில்கூட இந்த முரண்பாடுகள் உள்ளன. உதாரணமாக, ஒரே தாய் வயிற்றில் பிறந்த பல பிள்ளை

களில் ஒரு பிள்ளை மாதம் ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கும் அதிகாரி! இன்னொரு பிள்ளை தன் பெண்டு பிள்ளைகளைக் கூடக் காப்பாற்றப் போதாத ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்குபவன்! இன்னொரு பிள்ளை சமையற்காரன்! இன்னொருவன் சினிமா நடிகன்! மற்றொருவன் கார் டிரைவர்! இன்னொருவன் தலையில் சாமான்களைச் சுமந்து வீதிவீதியாக விற்பவன்! இப்படிப் பல விதம் உண்டு!

மற்றொரு விதமும் உண்டு: தகப்பன் படிப்பு வாசனையே அறியாதவன்; ஆனால், பிள்ளையோ உலகமெல்லாம் புகழும் உயர்ந்த மேதாவி. அல்லது தந்தை உலகமெல்லாம் புகழும் அறிவாளி. பிள்ளையோ எழுத்து வாசனையே அறியாத மூடன்.

மேலே கூறியுள்ளவை போன்ற முரண்பாடுகளை நாம் அன்றாட வாழ்க்கையில் கண்ணெதிரில் பார்த்து வருகிறோம்.

மேலும், ஒரே மனிதனின் வாழ்க்கையை எடுத்துக் கொண்டாலும், அவனுக்கு வெவ்வேறு காலங்களில் நேரும் வெவ்வேறு தொழில்களையும் சுகதுக்கங்களையும் பார்க்கிறோம். ஒரு சமயம் தேவையான அநேக வசதிகளுடன் அமோகமாக அவன் வாழ்கிறான். அநேக விதச் சிறப்புக்களை அடைகிறான். அதே மனிதனுக்குத் தன் வாழ்நாளில் மற்றொரு சமயத்தில் சகல சௌக்கியங்களும் மறைந்து, ஆற்று வெள்ளம் வற்றினதுபோல் ஆகிறது. செல்வம் அவனை விட்டு அகலுகிறது. உலகம் அவனைத் தாழ்ந்தவனாக மதிக்கிறது. இதற்கெல்லாம் காரணம் பூர்வ ஜன்ம கர்மம் என்று சொல்லப்படும் முற்பிறப்பு வினையேயாகும். "பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே" என்பது பட்டினத்தார் வாக்கு.

பூர்வ ஜன்ம கர்மம் என்பது, புண்ணிய ரூபமாகவும் பாவ ரூபமாகவும் இருக்கும். ஒவ்வொருவனும் தன் வாழ்நாள் முழுவதும் புண்ணியம் மாத்திரமோ, பாவம் மாத்திரமோ தனியாகச் செய்திருக்க மாட்டான். மிகுந்த புண்ணியசீலனுங்கூடத் தனக்குத் தெரியாமலே ஏதாவது பாவம் செய்திருக்கலாம். அவ்விதமே பாவியும் தனக்குத் தெரியாமல் ஏதாவது புண்ணியம் செய்திருப்பான். ஆகையால், ஒருவன் முன் ஜன்மத்தில் செய்த புண்ணியத்தையும் பாவத்தையும் அநுபவிப்பதற்காகவே மறுபடியும் ஜன்மம் எடுக்கிறான் என்பது இயற்கை நியதி.

இந்தப் பொன் மொழிகளைப் படியுங்கள்:—

"புண்ணியமாம் பாவம்போம் போனநாள் செய்தவவை
மண்ணில் பிறந்தார்க்கு வைத்த பொருள்." — **நல்வழி**

"முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்."

— **கொன்றை வேந்தன்**

"முற்பகல் செய்வான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம்." — **சிலப்பதிகாரம்**

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்." — **திருக்குறள்**

சென்ற பிறவியில் செய்த புண்ணியம் செல்வத்தைக் கொடுக்கும். பாவமானது அழிவுக்கே கொண்டு போய்ச் சேர்க்கும்.

பகலினது முற்பகுதியில் ஒருவன் மற்றொருவருக்குத் தீங்கு புரிந்தால், அதன் பயனை அப்பகலின் பிற்பகுதியிலேயே அவன் காண்பான். **முற்பகல்** என்பதற்கு **முற்பிறப்பில்** என்றும், **பிற்பகல்** என்பதற்கு **மறுபிறப்பில்** என்றும் பொருள் கொள்ளலாம்.

மனிதனுடைய செயலை ஒரு தராசுக்கோலுக்கு ஒப்பிடலாம். அதன் இருபுறத்திலும் உள்ள தட்டுக்களில் ஒன்றில் புண்ணியமும், மற்றொன்றில் பாவமும் வைத்திருக்கின்றன. புண்ணியம் அதிகமாக இருந்தால் அதற்குத் தக்கபடி வீடு, வாசல், வாகனம், பூமி, பசு, தனம், தானியம் போன்ற அதிக சுகங்களை அநுபவிக்கிறான். அதனால் அவனைப் புண்ணியம் செய்தவன் என்று உலகில் பேசுவார்கள். ஆனால், அவனும் முன் ஜன்மத்துப் பாவத்தின் பலனை அதே சமயத்தில் ஓரளவுக்கு அநுபவிக்காமலில்லை. உதாரணமாக, கை நிறையப் பணமும், கண் நிறைந்த மனைவியும், மற்ற வாழ்க்கை வசதிகளும் இருந்தும், தனக்குப் பின் தன் பெயர் சொல்ல - தன் செல்வத்தை அநுபவிக்க - ஒரு குழந்தை பிறக்கவில்லையே என்று ஏங்குகிறவன் இருக்கிறான் அல்லவா? இம்மாதிரியே பாவம் செய்தவன் என்று எண்ணப்படும் மற்றொருவன், மனைவி மக்களும், உற்றார் உறவினரும் நிறைந்திருந்தும் குடிக்கக் கூழும் உடுக்கத் துணியும் இல்லையே என்று அல்லும் பகலும் அல்லற்படுகிறான். ஆகையால், மனிதன் என்ற தராசுக்கோலுக்கு இருபுறமும் இருக்கும் புண்ணிய பாவங்கள் இடத்தை விட்டு மாறாமல், மனிதனுக்கு ஒரே சமயத்தில் சுகத்தையும் துக்கத்தையும் மாறி மாறிக் கொடுத்து வருகின்றன என்பது கண்கூடாகும்.

வேறொரு விதமும் காணலாம்: ஒருவன் துஷ்டன்; பல பாவச் செயல்களைப் புரிகிறான். ஆனால், அவன் வாழ்நாளில் வசதியாக வாழ்கிறான். மற்றொருவன் நல்லவன்; ஒருவருக்கும் தீங்கு செய்ய மனத்தாலும் நினையாதவன்; தெய்வ பக்தி உள்ளவன். ஆனால், அவன் படும் கஷ்டமோ சொல்லி முடியாது. நம் கண்முன் சுகங்களை அநுபவிக்கும் துஷ்டன் இந்த ஜன்மத்தில் தீச்செயல்களைப் புரிபவனாக இருந்தாலும், முன்ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பலனை இந்த ஜன்மத்தில் அநுபவித்து வருகிறான். அவனே இந்த ஜன்மத்திலும் புண்ணிய காரியமே செய்வானானால், இந்தப் பிறப்பின் முடிவிலேயே மறுபிறப்பில்லாத முக்தியை அடைவது திண்ணம். ஆனால் அவன் தீச்செயல்களைச் செய்வானாகில் அவன் தீய பலனை இப் பிறப்பிலோ அல்லது அடுத்த ஜன்மத்திலோ அநுபவிப்பது நிச்சயம். அப்படியே இந்த ஜன்மத்தில் நற்செயல் புரிபவனாக இருந்தும், கஷ்டத்தை அநுபவிப்பவன் தன் கஷ்டங்களுக்குப் 'பூர்வஜன்ம வினையே' காரணம் என்று தெரிந்து, அதற்காகத் தன்னாலியன்ற அளவில் நற்காரியங்களைச் செய்ய மேன்மேலும் முயல வேண்டும். ஷோப்பன்ஹார் என்ற தத்துவ விஞ்ஞானி, ''சென்றதை நினைத்து வருந்தாதே; எதிர்காலம் உன் கையில் இருக்கிறது. நல்வினையைச் செய்து உன் வருங்காலத்தைச் செம்மையாக வகுத்துக்கொள்'' என்கிறார்.

இதை மற்றொரு விதமாகவும் விளக்கலாம். ஒருவன் ஒரு பாங்கில் பணம் போட்டு வைக்கிறான். பணம் போடுகிறவன் நல்லவனா கெட்டவனா என்பதைப் பற்றிப் பாங்கிக்காரர்களுக்கு அக்கறை இல்லை. அவன் போட்டிருக்கும் பணம் கணக்கில் இருக்கும் வரையில் அவன் கேட்டபொழுதெல்லாம் பணம் கொடுத்துக் கொண்டே வருகிறார்கள். அவனுடைய பாங்கில் மிச்சம் இல்லாதிருந்தால் அவன் கொடுக்கும் 'செக்கை'த் திருப்பி அனுப்பி விடுவார்கள். அதுபோலவே, ஒருவன் இப்பொழுது துஷ்டனாக இருந்தாலும், பூர்வ ஜன்மத்தில் அவன் சேர்த்து வைத்த புண்ணியம் செலவழிந்து போகும் வரையில் அந்தப் புண்ணியத்துக்குத் தகுந்த சுகத்தைப் பகவான் கொடுத்து வருகிறார். அவ்விதமே பாங்கில் கடன் பட்டவன் நல்லவனானாலும், அவன் கடன் முழுவதையும் தீர்க்கும் வரையில் பாங்கிக்காரர்கள் அவனை வருத்துவது போலவே, பூர்வ ஜன்மத்தில்

செய்த பாவம் தீரும் வரையில் இந்த ஜன்மத்தில் நல்லவனுக இருந்தாலும் அவனுக்குப் பகவான் கஷ்டங்களைக் கொடுத்து வருகிறுர். இம்மாதிரி பாங்கிக்காரன் உள்ள நிலையில் இருக்கும் பகவானை நிந்திப்பதில் என்ன பயன்?

தாங்கள் செய்துள்ள தீவினையின் பயனுகக் கஷ்டப்படும் சிலர், அறிவிழந்து, ஆண்டவனை நோகின்றனர். என்னே இவர்கள் அறிவீனம்! அவர்கள் நம் ஔவைப் பிராட்டியாரின் அமுத மொழிகளை அமைதியாகப் படிக்கட்டும்:—

"செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்?— வையத்து
அறும்பாவம் என்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்?"

அந்தோ பாவம்! தான் செய்த அடாத செயல்களுக்குத் தண்டனைகளை அநுபவித்தே தீரவேண்டும். தண்டனைகள் அநுபவிக்கும் சமயம், கடவுளைத் திட்டுவதால், மிகுந்த செல்வம் இப்படிப்பட்ட பாவிகளை வந்தடையுமோ? வெறும் பானை பொங்குவதும் உண்டோ?

## பாவமும் மன்னிப்பும்

பூர்வ ஜன்மத்தில் பாவம் செய்ததனுல் தற்பொழுது கஷ்டத்தை அநுபவிப்பவர்களுக்கு விமோசனமே இல்லையா? இருக்கிறது.

அதையும் ஓர் உதாரணத்தால் விளக்கலாம்: ஒருவன் ஏதோ குற்றம் செய்துவிட்டான். அவன் செய்த குற்றத்திற்கு அவனுக்கு ஏழு வருஷம் கடின தண்டனை விதிக்கலாமென்று சட்டம் இருக்கிறது. அவன் கண்ணீரும் கம்பலையுமாக, மனம் நெகிழ்ந்து, தான் செய்த குற்றத்தை உணர்ந்து நீதிபதியிடம் தனக்குத் தண்டனையேயில்லாமல் மன்னித்துவிட வேண்டுமென்று மன்றுடிக் கேட்டுக் கொள்கிறுன். ஆனுல், சட்டப்படி தவறு செய்தவன் தண்டனையை அநுபவித்தே தீர வேண்டுமென்று இருப்பினும், அவன் தன் குற்றத்துக்காக மனமார வருந்தியதனுல், ஏழு வருஷத் தண்டனையை ஐந்து வருஷமாகக் குறைத்துவிட்டதாக நீதிபதி தீர்ப்பளிக்கிறுர். அவ்விதமே முன் ஜன்மத்தில் செய்த பாவத்துக்கு இந்த ஜன்மத்தில் கஷ்டங்களை அநுபவிக்க

வேண்டியது நியதியானாலும், மனம் உருகி மன்றாடிக் கேட்டுக்கொண்டால் பகவான் நம் கஷ்டங்களைக் குறைத்து, அதோடு கஷ்டங்களைப் பொறுத்துக்கொள்ளும் ஆற்றலையும் அருளுகிறார். நல்ல நிலையில் உள்ளவர்கள் மீண்டும் மீண்டும் பகவானைத் துதித்து வந்தால், அவர்களுக்கு மேன்மேலும் சுகம் உண்டாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

" கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும்நின் னைந்தெழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே!"

எனப் பட்டினத்தார் நெஞ்சம் நெக்குருகப் பாடிய பாடலினை நினைந்து நினைந்து பாடும் அடியவர்களும் ஆண்டவனால் மன்னிக்கப்பட்டு ஆட்கொள்ளப்படுவார்கள் என்பது திண்ணம்.

மேற்கண்ட உதாரணங்களால் என்ன தெரிகிறது? ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கையில் ஏற்படும் சுகமோ துக்கமோ அவன் முற்பிறப்பில் செய்த கருமத்தை அநுசரித்ததே என்பது தெரிகிறது. மற்றும் அவன் நல்ல சமயத்தில் அதாவது நல்ல லக்னத்தில் அல்லது சாதாரண லக்னத்தில் பிறப்பதும் அவன் செய்த பூர்வ ஜன்ம கருமத்தைப் பொறுத்ததே ஆகும். கிரஹங்கள் சுப ஸ்தானத்திலோ அசுப ஸ்தானத்திலோ அமைவதும் அவன் முற்பிறப்பில் செய்த கருமத்தைப் பொறுத்ததேதான் என்று அறிய வேண்டும். ஜாதகம் நம் இருவினைப் பயன்களுக்கும் உள்ள பலாபலன்களை எடுத்துக் காட்டும் ஒரு கணக்கு.

முன்பு விவரித்தபடி ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கையில் ஏதாவது ஒரு குறை இருந்தே தீரும். இருப்பினும், அதைத் தீர்த்துக்கொள்ள வழி இல்லாமலில்லை. உதாரணமாக, உடலிலுண்டாகும் நோய்களைக் குணப்படுத்துவதற்காகப் பகவான் மருந்துகளையும் மருத்துவர்களையும் படைத்திருக்கிறார். நமக்கு ஏதாவது வியாதி ஏற்பட்டால் நல்ல மருத்துவரை அணுகி அவர் சொன்னபடி மருந்து சாப்பிட்டுக் குணப்படுத்திக்கொள்கிறோம். அவ்வாறன்றி மருத்துவரிடம் போகத் தயங்கினால் வியாதி தீராமல் வருந்த வேண்டியதுதான்.

அம்மாதிரியே பகவான் 'சோதிடம்' என்ற பெயருள்ள சாஸ்திரத்தை நமக்கு அருளியிருக்கிறார். அதன்

மூலம் 'ஜாதகம்' என்னும் வாழ்க்கைத் துணையையும் நமக்கு ஏற்படுத்தியிருக்கிறார். ஆகையால், குழந்தை பிறந்தவுடனே அது பிறந்த தேதி, மணி, நிமிஷங்களைக் குறிப்பிட்டு, அவற்றை ஒரு நிபுண சோதிடரிடம் கொடுத்து அதன் ஜாதகத்தைக் கணித்துக் கொள்ள வேண்டியது ஒவ்வொரு தாய் தந்தையரின் கடமையாகும். அவர் அந்த ஜாதகத்துடன் தசாபுக்திகளின் அட்டவணையையும் எழுதிக் கொடுப்பார்.

நீங்கள் ஒரு சிறந்த சோதிடரிடத்தில் ஜாதகம் கணித்துக்கொண்டீர்கள்; நடக்கும் தசாபுக்திகளும் எழுதிக்கொண்டீர்கள். குறிப்பிட்ட தசாபுக்தி உங்களுக்குக் கெடுதலாக இருக்கிறது. **அதற்காக நீங்கள் வருந்த வேண்டாம்.** நீங்கள் மனமுருகிக் கடவுளைத் துதி செய்தால், கிரஹங்கள் உங்களுக்குத் தரும் கஷ்டங்கள் நிச்சயமாகக் குறைந்துவிடும். அவரவர்கள் தத்தம் மதத்துக்குத் தக்கபடி தம் முன்னோர்கள் வகுத்த வழியில் இந்தத் துதிகளைச் செய்யலாம்.

## ராமாயண பாராயணமும் கிரஹப் பிரீதியும்

ஸ்ரீமத் ராமாயணம், மஹாபாரதம், பாகவதம் ஆகிய மூன்றும் நம் நாட்டுத் தெய்விக நிதிகளாகும். நம்மிடம் கொண்டுள்ள அளவற்ற கருணையால் முனிவர்கள் இம் மூன்று அழியாச் செல்வங்களையும் நமக்கு அருளியுள்ளார்கள். அவற்றுள் ராமாயணம் தலைசிறந்தது.

ராம கதை பிறப்பதற்கு முன்னதாகவே விசுவாமித்திரர், வஸிஷ்டர், வால்மீகி ஆகிய மூவரும் கூடி, எல்லா உயர்ந்த குணங்களும் பண்புகளும் நிரம்பிய ஒரு மகா புருஷன் உலகில் அவதரிக்க வேண்டும் என்று விரும்பினார்கள். அவ்வாறே எல்லா விதமான கல்யாண குணங்களும் கொண்ட ராமபிரான் தோன்றியவுடன், வால்மீகி முனிவர் அவர் கதையைக் காவியமாகப் பாடினார். நவரத்தினங்களை இழைத்துச் சிறந்த முறையில் ஒரு பதக்கம் செய்வதுபோல, வால்மீகி முனிவர் ராமாயண காவியமாகிய பதக்கத்தைச் செய்து உலகுக்கு வழங்கினார். ராமன், சீதா தேவி, லட்சுமணன், பரதன், சத்ருக்கினன், குகன், சுக்கிரீவன், விபீடணன், அனுமான் ஆகியவர்கள் பதக்கத்தில் பதிக்கப் பெற்ற மணிகளைப் போன்றவர்கள். இந்த நவமணிப் பதக்கம் உலகம் உள்ள வரையில் நின்று ஒளி தரும் என்பது உறுதி.

ராம கதையைப் பாடியவர்கள் பலர். கம்பர் ஸரயூ நதியையும் அயோத்தி மக்களையும் வர்ணிப்பதிலேயே தம்முடைய கவித் திறமையைக் காண்பித்துவிடுகிறார். தேசிகன் ராம பாதுகையின் பெருமையைப் பாட ஆரம்பித்து, ஆயிரம் பாட்டுக்களை அள்ளிக் கொட்டுகிறார். காளிதாசர் ஸ்ரீராமருடைய வம்ச பரம்பரையைப் பேச ஆரம்பித்து 'ரகுவம்சம்' என்ற அமரகாவியத்தைச் சிருஷ்டிக்கிறார். பவபூதி உத்தரராம சரிதத்தை எழுதி, ஸ்ரீமத் ராமாயணம் முழுவதையும் அற்புதமாகப் பாடியிருக்கிறார். இன்னும் துளசிதாஸர் போன்றவர்கள் ராம கதையின் ஒவ்வொரு பாகத்தையும் விரிவாகப் பாடி மகிழ்ந்திருக்கிறார்கள்.

மக்கள் உய்யும்பொருட்டு நம் முன்னோர் நல்ல வழிகளை வகுத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஸன் மார்க்கங்களை ஸ்ரீமத் ராமாயணம் அழகாக எடுத்துக் காட்டுகிறது. ஸ்ரீராம, லட்சுமண, பரத, சத்ருக்கின என்ற நான்கு அவதார மூர்த்திகளும் மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய பலவித தர்மங்களை நல்ல முறையில் நடத்திக் காட்டியிருக்கிறார்கள். ஸ்திரீ தர்மத்தை சிறப்பாக விளக்கவே, நம் லோகமாதா "ஸீதா தேவியாக" அவதரித்தார். முக்கியமாக, "சரணாகதி" தத்துவத்தை விளக்கவே திருமால், ஸ்ரீராமச்சந்த்ர மூர்த்தியாக அவதரித்தார். "சரணாகதிக்கு" ஜாதி மத வேறுபாடு இல்லை; ஆண் பெண் வேறுபாடு இல்லை. உயர்திணை, அஃறிணைப் பாகுபாடு இல்லை என்னும் உண்மையை அவர் காண்பித்திருக்கிறார்.*

நம் வாழ்க்கையில் துன்பம் வரும்பொழுது இராம கதையைப் பாராயணம் செய்தால், துன்பங்கள் விலகி மனச்சாந்தி ஏற்படும்* என்பது நம் முன்னோர்கள் கண்ட உண்மை. அந்தக் கருத்துடன்தான் வால்மீகி முனிவர்

"*The conception of God in the TIRUVAIMOLI is very sublime. The very first line of the TIRUVAIMOLI describes the Lord as One whose excellence is supreme. But this Being of Supreme Excellence is not a far-off, high and mighty Being, indifferent to the weal and woe of souls. Hidden in every thing It pervades everything, even as the invisible soul pervades and actuates the body. This being is so full of love for souls that in the incarnations, e.g., Ramavatara, it takes on the human form and suffers every woe that human flesh is heir to.

"Are those born in the world, anything in themselves, if they do not become devotees of the Lord, after having heard how He was born in the world and for the sake of human beings endured untold suffering; Who, seeking out the evil ones who afflicted the earth, destroyed them and thus protected and redeemed the world?"

— **Dr. V. A. Devasenapathi** (in "The Bhavan's Journal")

ராமாயண காவியத்தைப் பாடினார். ராம நாமத்துக்கு அளவற்ற பெருமை உண்டு. சர்வமங்களத்தையும் அளிக்கக்கூடிய ஸ்ரீமத் ராமாயணத்தை எல்லோரும் பாராயணம் செய்து பெரும்பயன் அடைதல் வேண்டும்.

"நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே !
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே !
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே !
இம்மையே 'ராம' வென் றிரண் டெழுத்தினால்"

என்ற கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரின் வாக்கு, கல்லையும் கனிவிக்கும்; இரும்பையும் இளக வைக்கும்.

நாம் கஷ்டத்தில் இருக்கும்பொழுது கஷ்டங்களைக் குறைத்துக்கொள்ளவும், கவலையுற்றிருக்கும்போது மனச்சாந்தி பெறவும், சுகத்தில் இருக்கும்பொழுது மேன்மேலும் சுகத்தை வளர்த்துக்கொள்ளவும் நம் நாட்டுப் பழைய ஏடுகளில், எளிதாக அநுசரித்து வரக்கூடிய பல பொது வழிகளைப் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஜாதகத்தில் ஒவ்வொரு தசைக்கும், தசையில் உள்ள புக்திகளுக்கும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் குறிப்பிட்ட சில ஸர்க்கங்களைத் தினந்தோறும் பக்தியுடன் பாராயணம் செய்து வந்தால் நவக்கிரஹ தோஷங்களினால் ஏற்படக்கூடிய கெடுதல்களுக்குச் சாந்தி ஏற்படும்; அதிர்ஷ்டவசமாக, நவக்கிரஹங்கள் ஜாதகத்தில் நல்ல இடங்களில் அமைந்திருந்தால், இப் பாராயணத்தினால் ஜாதகருக்கு நன்மை மேலும் மேலும் அதிகரிக்கும்.

''நவக்கிரஹங்களுக்கும் ராமாயணத்துக்கும் என்ன ஐயா சம்பந்தம்? ராமாயண பாராயணத்தின் மூலம் நவக்கிரஹங்களை எப்படித் திருப்தி செய்விக்க முடியும்?'' என்று சிலர் சந்தேகித்துக் கேட்கலாம். ராமாயணத்தின் மகிமையை நன்கு அறிந்துகொண்டால் இம்மாதிரி ஐயங்கள் எளிதில் நீங்கிவிடும்.

ராமாயணத்தின் ஒவ்வொரு ஸர்க்கத்தையும் பாராயணம் செய்வதற்கு பிரத்தியேகமான ஒரு பலன் உண்டு. ஒரு குறிப்பிட்ட தசை, ஒரு குறிப்பிட்ட புக்தி நடக்குங்கால் குறிப்பிட்ட ஸர்க்கங்களைப் பாராயணம் செய்தால், அதனால் ஏற்படும் நற்பலன் அந்தத் தசையிலும் அந்தப் புக்தியிலும் ஏற்படக்கூடிய தோஷங்களுக்குப் பரிகாரமாக அமையும். அப்படி அந்தத் தசையும் புக்தியும் ஒருவருக்கு ஜாதகப்படி நன்மையேசெய்யக்கூடியனவாகஇருந்தாலும் இந்த ஸர்க்கங்களைப் பாராயணம் செய்வதனால் இந்தத் தசா புக்தியில் சாதாரணமாக ஏற்படக்கூடியநன்மையை விட மேலும் அதிக அளவில் நற்பலன்கள் ஏற்படும்.

இதை மனத்திற்கொண்டே ஸர்வலோக ரக்ஷகனுன ஸ்ரீபரமேசுவரன் லோகமாதாவான பார்வதி தேவியிடம், மனிதனுக்கு ஒவ்வொரு தசையும், அதனுடைய ஒவ்வொரு புக்தியும் நடக்கும்போது அவன் எந்த எந்த ராமாயண ஸர்க்கங்களைப் பாராயணம் செய்ய வேண்டுமென்பதைக் கூறியிருப்பதாகப் பதினெண் புராணங்களில் ஒன்ருன வாயு புராணத்தைச் சேர்ந்த 'உமா ஸம்ஹிதை' என்ற பகுதி கூறுகிறது.

புராணப் பிரசித்தமான இந்த அத்தாட்சியைக் கொண்டே, ''தசாபுக்திகளும் ராமாயண பாராயணமும்'' என்ற பெயருடன் ஒன்பது தசைகளுக்கான ஒன்பது புத்தகங்களைத் தொகுத்துள்ளோம்.

ஆகையால், நாம் ஒவ்வொரு சகோதரரையும், சகோதரியையும் கேட்டுக்கொள்வது:

> **நீங்கள் உடனே ஒரு நிபுண சோதிடரை அணுகி, உங்கள் ஜாதகத்தையும் தசா புக்திகளையும் தேதிவாரியாகக் கணித்து வைத்துக்கொள்ளுங்கள். உங்களுக்கு என்ன தசை, என்ன புக்தி தற்பொழுது நடக்கிறதோ அதற்கு ராமாயணத்தில் எந்த எந்த ஸர்க்கங்களைப் பாராயணம் செய்ய வேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறதோ அந்த ஸர்க்கத்தையோ ஸர்க்கங்களையோ தவருமல் தினந்தோறும் பக்தியுடனும் சிரத்தையுடனும் பாராயணம் செய்யுங்கள். நீங்கள் பாராயணம் செய்யச் செய்ய, உங்கள் எண்ணங்கள் நிறைவேறுவதுடன், உங்கள் கஷ்டங்களும் நிச்சயமாகக் குறைந்து விடும். இதுவே நாங்கள் அநுபவத்தில் கண்ட உண்மை.**

குறிப்பு: ஒவ்வொரு தசா புக்திகளிலும் பாராயணம் செய்ய வேண்டிய ராமாயண ஸர்க்கங்களின் அட்டவணையை இப்புத்தகத்தில் கொடுத்திருக்கிறேம்: நீங்கள் எந்த எந்த ஸர்க்கங்களைப் பாராயணம் செய்யவேண்டும் என்பதை, இதிலிருந்து சுலபமாக அறிந்துகொள்ளலாம்.

## இந்தப் புத்தகம் எதற்காக ?

*''ஆண்டவனின் படைப்புத் திறம் ஒரு விசித்திரம்; அவனது அழிவு வேலையும் ஒரு விசித்திரந்தான்.

''ஒரு புறத்தில் தூய்மையைப் பரப்பிவைக்கிருன்; எதிர்ப்புறத்தில் கயமையையும் தூண்டிவைக்கிருன். அழகையும் அற்புதத்தையும் படைக்கிருன் ஒரு புறத்தில்; அவலட்சணத்தையும் மறந்துவிடாமல் கூடவே குவித்து வைக்கிருன்-மறுபுறத்தில்!

* ''கல்கி'', 18-9-1960.

. "அத்துடனா? அவனது பராமரிப்பில்தான் எத்தனைய ஜாலங்கள்? தன் ஜாலங்களை எங்கேயோ இருந்தபடி கண்டு சிரிக்கிறான். அவனது சிரிப்பொலியின் பெயர் விதி!"

இந்த விதியினால் ஏற்படும் தீய விளைவுகளைப் பக்தியால் சமாளிக்கலாம்; விதியினால் விளையும் இன்பங்களைப் பக்தியால் பெருக்கலாம்.

இப் பக்தியைப் பேரளவில் பரப்பவே, முன் காலத்தில் நம் தேசத்துக் கோயில்கள் தெய்வ வழிபாட்டுக்கு மிகவும் பிரசித்தமாக இருந்தன. அக் காலங்களில் நம் தேசத்தை ஆண்டவர்கள் தெய்வ நம்பிக்கை நிறைந்தவர்களாகத் திகழ்ந்து வந்தனர்.

கோயில்களில் பூஜை செய்பவர் பகவானுக்குப் பாமாலையும் பூமாலையும் சூட்டிப் பூஜை செய்து கடைசியில் "தேசமெல்லாம் சுகமாக இருக்க வேண்டும்" (ஸர்வே ஜநாஸ் ஸுகிநோ பவந்து) என்று பிரார்த்தனை செய்வது வழக்கம். அதனால் நாட்டுக்காவது, தனி மனிதனுக்காவது எவ்விதக் கெடுதியும் நேராமலிருந்தது; மாதம் மும்மாரி பொழிந்து நாடும் செழித்தது. மக்களும் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர்.

ஆனால், இன்று நம் நாட்டின் நிலை என்ன? நாம் எல்லோரும் எதிர்பார்த்த சுதந்திரம் கிடைத்தது. ஆயினும் சுதந்திரத்தால் நாம் எதிர்பார்த்த சுகம் கிடைக்கவில்லை. அதற்குப் பதிலாக நம்மைச் சுற்றி எங்கே பார்த்தாலும் கஷ்டம்! கஷ்டம்! கஷ்டம்! வாழ்க்கைக்கு மிகவும் அவசியமான பொருள்களின் விலைவாசிகள் விஷம் போல் ஏறி வருகின்றன. கறுப்பு மார்க்கெட் வியாபாரத்தாலும், கெட்ட வழக்கங்களாலும் மனிதன் மனிதனையே விழுங்க முயலுகிறான். அருகதையற்றவன், தன் அதிகாரியிடம் கோள் சொல்லி, அருகதையும் அநுபவமும் நிறைந்து முன்னேற வேண்டியவனைப் புறக்கணிக்கச் செய்து, தன் அதிகாரத்தில் உயர்வைப் பெறுகிறான். இந்த அநீதிகள் எல்லாம் ஒழிய வேண்டுமானால், கடவுளைக் குறித்துத் தினந்தோறும் கூட்டுப் பிரார்த்தனை (*Mass Prayers*) நடத்த வேண்டும்.* கூட்டுப் பிரார்த்தனையின் மகிமையாலேயே நாம் சுதந்திரத்தை அடைய முடியும் என்பதை அண்ணல் காந்தி மகான் தம் அன்றாட

* (Please see foot-note on the next page.)

வாழ்க்கையில் செய்து காட்டினார். ஆகையால், ஒவ்வொரு வரும் தங்கள் வீட்டில் ராமாயணத்தைத் தினந் தோறும் பாராயணம் செய்து வந்தால், அதுவே ஒருவகை யில் கூட்டுப் பிரார்த்தனைக்கு ஒப்பாகி, நாட்டுக்கு நன்மை உண்டாக்கும் என்பது எங்களுடைய திடமான நம்பிக்கை. முக்கியமாக மேற்படி ராமாயணத்தை முழுவதும் பாராயணம் செய்வதற்குச் சௌகரியமில்லாதவர்கள், அவரவர் தத்தம் தசாபுக்திகளுக்காக நிர்ணயிக்கப்பட் டுள்ள ராமாயண ஸர்க்கத்தையாவது நாள்தோறும் பாராயணம் செய்வார்களானால் அதன் மூலம் அவர்க ளுடைய கஷ்டங்களெல்லாம் நீங்கிச் சுகம் உண்டாகும். **மேலும் காந்தி மகான் கனவு கண்ட ராம ராஜ்யமும் அன்றே உண்டாகும் என்ற நம்பிக்கையுடனேயே இந்தப் புத்தகத்தை வெளியிட்டுள்ளோம்.**

நம் முன்னோர்கள் தம் நலத்துக்காக மட்டும் அல்லா மல், உலகமெல்லாம் உய்ய வேண்டும் என்னும் பரந்த நோக்கத்துடனேயே தெய்வ வழிபாட்டைச் செய்து வந் தார்கள். அவ்விதம்* **அனைவரும்** நாள்தோறும் தாம் செய்யும் பாராயணத்தால் ‘எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும்’ என்னும் நல்ல மனப்பான்மையுடன் பாரா யணம் செய்வார்களாக!

*“Of the twelve Alvars, Nammalvar is considered to be the greatest. Taking the Alvars as a ‘whole’, Nammalvar is considered to be their soul. The very term ‘Nammalvar’ (which means our Alvar) shows the esteem in which he was and is held by the Vaishnavites. But we can go further and say that not only Vaishnavites but also all those whose hearts are thrilled by the utterances of the mystics, can claim Nammalvar as their own.

“Nammalvar worships the Supreme as Vishnu. But he does not frown upon those who worship the Supreme under other names. He is sure that all true worship must be of the Supreme. Every one, according to his capacity, worships the Supreme as he conceives It and attains It. Hence there is no defect or deficiency in the object of worship. In other words, his message is: ‘Let the worship be sincere; it will reach the Supreme.’

“It is usual to deplore Kaliyuga as a period wholly given over to wickendess. Nammalvar's remedy is sincere and joint worship. He says, ‘If you sincerely and jointly worship, there will be no Kaliyuga’. This is sound practical advice. If we all worship the Supreme, the One with infinite auspicious qualities, how can there be wickedness? If light is let in, how can there be darkness? There is no use deploring darkness when we are enveloped by it. Let us let in light. Darkness will automatically disappear. Even so, worship of the Supreme is the antidote to wickedness.”

— **Dr. V. A. Devasenapathi** (in “The Bhavan's Journa”)

அனைவரும் முக்கியமாக மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டிய மற்றொரு விஷயமும் உண்டு. நாம் தெய்வத்தை வழிபாடு செய்வது இம்மைப் பயன் ஒன்றுக்காக மாத்திரம் கூடாது. இம்மைப் பயன் அழிவுள்ளது; சுக துக்கங்களுக்குக் காரணமான மறு பிறப்பை அளிக்க வல்லது. ஆகையால், அழிவற்ற மறுமைப் பயனை, அதாவது பிறப்பில்லாத முக்தி நிலையை அடைவதே நம் வழிபாட்டின் முக்கிய நோக்கமாக இருத்தல் வேண்டும். இதையே நம் முன்னோர்கள் வாழையடி வாழையாகச் சொல்லி வந்திருக்கிறார்கள். நம் தமிழ்நாட்டின் தவப்புதல்வர் கோபால கிருஷ்ண பாரதியார்,

> "மறுபடியும் கருவடையும் குழியில் தள்ளி வருத்தப் படுத்த வேண்டாம்"

என்று இறைவனைக் குறித்துச் சொன்ன பாடலை நாம் அனைவரும் மனத்தில் நினைத்தல் வேண்டும். அப்படி ஒவ்வொருவரும் இம்மை மறுமைப் பயன்களையும் உலக நன்மையையும் விரும்பி, இந்தப் புத்தகத்திலுள்ள இராமாயண ஸர்க்கங்களைப் பாராயணம் செய்து வருவார்களானால் நம் நாட்டில் இன்று இருக்கும் அவல நிலை ஒழிந்து, ராம ராஜ்ய சௌக்கியங்கள் உண்டாகும் என்பது திண்ணம்.

சுருங்கக் கூறின், ஒவ்வொருவரும் தினந்தோறும் அவரவர் ஆசாரப்படி கோயில்களுக்குப் போய் ஸ்வாமி தரிசனம் செய்து, உருக்கமாகப் பிரார்த்தனைகளும் செய்து இப் புத்தகத்தில் கண்டுள்ள ராமாயண ஸர்க்கங்களைப் பாராயணமும் செய்து வந்தால் கிரஹ தோஷங்களால் ஏற்பட்டுள்ள கஷ்டங்கள் நீங்கும்.

அவ்விதம் கோயில்களுக்குப் போக நேரம் அல்லது வசதி இல்லாதவர்கள், தங்கள் இல்லங்களிலேயே ஸ்ரீ ராமபிரானை மனத்தால் நினைத்து பக்தியுடன் வழிபட்டுப் பிறகு, இப்புத்தகத்தில் கூறியுள்ளபடி தினந்தோறும் ராமாயண பாராயணமும் செய்து வந்தால் அவர்களுக்கு எல்லா விதமான நன்மைகளும் ஏற்படும் என்பது உறுதி.

## தசை என்றால் என்ன ?

தசை என்பது, மனிதனின் வாழ்நாட்களில் கிரஹங்கள் ஆட்சி செலுத்தும் கால அளவு (Period) என்று

பொருள்படும். மனிதனுடைய வாழ்நாளை 120 வருஷங்கள் என்று சோதிட சாஸ்திரத்தில் நிச்சயித்திருக்கிறார்கள். இது தீர்க்காயுசு எனப்படும். 120 வருஷங்கள் உயிர் வாழ்வார்களா என்று எண்ணக்கூடாது. 15-3-1960 அன்றைய 'தினமணி'யில் மலேயா நாட்டு அரச குடும்பத்தில் 120 வயதுள்ள 'யாங் முலியா' என்ற பெயருள்ள இளவரசி இன்னும் நல்ல ஞாபக சக்தியுடன் இருப்பதாகச் செய்தி வெளிவந்திருக்கிறது.

முருகபக்தியில் ஈடும் இணையும் அற்ற, நமது திருமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்களைத் தாயினும் சாலப் பேணி வளர்த்த அன்னாரது பாட்டி சௌந்தரம்மாள் அவர்கள் 110 வயது வரை வாழ்ந்து 13—9—1960 தேதியன்று ஈசன் திருவடி அடைந்ததாக 'ஆனந்த விகடன்' (9—10—1960) கூறுகிறது. இப்படி 100-க்கு மேல் வயதுடன் நோயின்றி வாழும் நல்லார் பலர் சிறிய கிராமங்களில் இன்றும் வாழ்ந்து வருகின்றனர் என்று கேள்விப்படுகிறோம்.

ஆகையால், தீர்க்காயுசு என்பது 120 வருஷங்கள் என்று நம் சோதிடக் கிரந்தங்களில் நிர்ணயித்திருப்பது உண்மையாகும். மேற்கண்ட 120 வருடங்களை 9 பாகங்களாகப் பிரித்திருக்கிறார்கள். ஒன்பதும் சமபாகங்கள் அல்ல; சிறிது ஏற்றக் குறைவுள்ள பாகங்கள். அவரவர் ஜனன நட்சத்திரத்தையொட்டி, கேது, சுக்கிரன், சூரியன், சந்திரன், செவ்வாய், ராகு, குரு, சனி, புதன் இந்த வரிசையில் தசைகள் நடக்கும். இந்த ஒன்பது தசைகளுக்கும் மேற்கண்ட 120 வருடங்களும் பின்வருமாறு பங்கிடப்பட்டிருக்கின்றன:—

| | கிரஹம் | தசை (வருஷங்கள்) | | கிரஹம் | தசை (வருஷங்கள்) |
|---|---|---|---|---|---|
| (1) | கேது | 7 | (6) | ராகு | 18 |
| (2) | சுக்கிரன் | 20 | (7) | குரு | 16 |
| (3) | சூரியன் | 6 | (8) | சனி | 19 |
| (4) | சந்திரன் | 10 | (9) | புதன் | 17 |
| (5) | செவ்வாய் | 7 | | | |
| | ஆக மொத்தம் | | | | 120 |

அதாவது, 120 வயதுள்ள ஒருவருக்கு ஜனன காலத்தில் கேது தசை ஆரம்பித்தால், பிறகு சுக்கிர தசை

20 வருஷம், சூரிய தசை 6 வருஷம், சந்திர தசை 10 வருஷம், செவ்வாய் தசை 7 வருஷம் இவ்விதமாகத் தசைகளைக் கணித்துக் கொள்ள வேண்டும்.

## முதல் தசை எது?

முதல் தசை என்பது அந்த அந்த ஜாதகன் பிறந்த நட்சத்திரத்தையொட்டி ஆரம்பமாகும். உதாரணமாக, ஒருவன் 'கிருத்திகை' நட்சத்திரத்தில் பிறந்தால் அவனுக்கு ஜனன காலத்தில் சூரிய தசை ஆரம்பமாகும். ஒருவன் 'ரோகிணி'யில் பிறந்தால் சந்திர தசை ஆரம்பமாகும். இவ்விதமே மற்ற நட்சத்திரங்களுக்கும் அந்த அந்தத் தசைகள் ஆரம்பமாகும்.

இதை அறியும் விதம் வருமாறு: நட்சத்திரங்கள் மொத்தம் 27 என்பது யாவரும் அறிந்ததே. அந்த 27 நட்சத்திரங்களையும் 9 கிரஹங்களுக்கு மும்மூன்ருகப் பங்கிட்டிருக்கிருர்கள். வரிசையாக மும்மூன்று நட்சத்திரங்கள் அல்ல. வரிசையாக ஒவ்வொரு கிரஹத்துக்கும் ஒவ்வொரு நட்சத்திரத்தைக் கொடுத்து, அந்த அந்த நட்சத்திரத்துக்குப் பத்தாவது நட்சத்திரத்தை மறுபடியும் அதே கிரஹத்துக்குப் பங்கிட்டிருக்கிருர்கள். அதன் விவரம்:

| நட்சத்திரம் | | | கிரகம் |
|---|---|---|---|
| அசுவினி | மகம் | மூலம் | கேது |
| பரணி | பூரம் | பூராடம் | சுக்கிரன் |
| கிருத்திகை | உத்திரம் | உத்திராடம் | சூரியன் |
| ரோகிணி | ஹஸ்தம் | திருவோணம் | சந்திரன் |
| மிருகசீர்ஷம் | சித்திரை | அவிட்டம் | செவ்வாய் |
| திருவாதிரை | சுவாதி | சதயம் | ராகு |
| புனர்வசு | விசாகம் | பூரட்டாதி | குரு |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி | சனி |
| ஆயில்யம் | கேட்டை | ரேவதி | புதன் |

மேற்கண்ட அட்டவணையால் விளங்குவது யாதெனில், அசுவினி, மகம், மூலம் இந்த மூன்று நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்களாஞலும், அவர்

களுக்கு ஜனன காலத்தில் கேது தசை ஆரம்பம் என்ப தாம். இவ்விதமே பரணி, பூரம், பூராடம் இவற்றில் ஏதாவது ஒரு நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்குச் சுக்கிர தசை ஆரம்பமாகும். இம்மாதிரியே அவரவர் நட்சத் திரத்தையொட்டி ஜனன காலத்தில் அவரவர்களுக்கு எந்தத் தசை ஆரம்பமாகும் என்று தெரிந்துகொள்ள லாம்.

## முதல் தசையில் கவனிக்க வேண்டியது

மேற்கண்டபடி ஒவ்வொருவருக்கும் ஆரம்பமாகும் முதல் தசை அவரவர் ஜன்ம நட்சத்திரத்துக்கான முழுக் காலத்திலும் இராது. அதாவது கிருத்திகையில் பிறந்த ஒருவன், சூரிய தசை 6 வருஷத்தையும் அநுப விப்பான் என்று சொல்ல முடியாது. ஏனெனில் கிருத் திகை நட்சத்திரத்தில் பிறப்பவன் அந்த நட்சத்திரம் ஆரம்பமான முதல் விநாடியிலேயே பிறந்தால், முதல் தசையாகிய சூரிய தசையை 6 வருஷமும் கணக்கிடலாம். இப்படி அநேகமாக நேராது. எவ்வாறெனில், ஒருவன் கிருத்திகை நட்சத்திரத்தில் 60 நாழிகை உள்ள ஒரு நாளில் அந்த நட்சத்திரம் ஆரம்பமாகி 20 நாழிகை கழிந்த பிறகு பிறந்திருப்பான். அவனுக்குச் சூரிய தசை யில் $\frac{1}{3}$ போக, மீதி $\frac{2}{3}$ அதாவது சுமார் 4 வருஷமே இருப்பு என்று சொல்ல வேண்டும். இதற்கு ஜனன கால தசாசேஷம் என்று பெயர். இந்த ஜனன கால தசாசேஷத்தை மாத்திரம் ஒரு சோதிடரிடம் தெரிந்து கொண்டால் மற்றைய தசாபுக்திகளை நாமாகவே எளிதில் கூட்டித் தெரிந்து கொள்ளலாம்.

## புக்தி என்றால் என்ன ?

புக்தி என்பது தசையில் ஒரு பாகம்; அதாவது ஒரு கிரஹ தசைக்குள் மற்றைய கிரஹங்கள் வரிசையாக வந்து ஆட்சி செலுத்தும் காலம் 'புக்தி' (Sub-period) எனப்படும். தசை எந்தக் கிரஹத்தினுடையதோ, அதன் புக்தி முதலில் ஆரம்பமாகும். உதாரணமாகச் சூரிய தசையில் சூரிய புக்தி ஆரம்பம். பிறகு சந்திர புக்தி,

செவ்வாய் புக்தி. இவ்விதமாக, சூரிய தசை, சூரிய புக்தியுடன் ஆரம்பித்துச் சுக்கிர புக்தியுடன் முடியும். இதே மாதிரி, சந்திர தசை, சந்திர புக்தியில் ஆரம்பித்துச் சூரிய புக்தியோடு முடியும். இம்மாதிரியே மற்றைய கிரஹங்களின் தசைகளின் புக்திகளை அறிய வேண்டும். தசையானாலும் புக்தியானாலும் கேது சுக்கிரன், சூரியன், சந்திரன், செவ்வாய், ராகு, குரு, சனி, புதன் என்ற முறையிலே வரிசையாகத்தான் வரும்.

## புக்திகளைக் கண்டுபிடிக்கும் சுலபமான வழி

தசாநாதனுடைய கிரஹத்தின் தசை வருஷ எண்ணை, புக்திநாதனுடைய கிரஹத்தின் தசை வருஷ எண்ணால் பெருக்கி வரும் மொத்த எண்ணில் கடைசி எண்ணுக்கு முன் புள்ளி வைக்கவேண்டும். அந்தப் புள்ளிக்கு முன்னுள்ளவை புக்தி மாதங்கள். புள்ளிக்குப் பிறகு உள்ள எண்ணை மூன்றால் பெருக்க அவை நாட்களாகும்.

**உதாரணமாக, சூரிய தசை, செவ்வாய் புக்தி கணிக்கும் விதம்:** தசாநாதனுடைய சூரிய தசை வருஷ எண் 6-ஐ, புக்திநாதனுடைய செவ்வாய் தசை வருஷ எண் 7-ஆல் பெருக்க $6 \times 7 = 42$. இதில் கடைசி எண்ணான 2க்கு முன் புள்ளி வைக்க 4.2 ஆகும். புள்ளிக்கு முன்னுள்ள எண் 4 மாதங்களாகும். புள்ளிக்குப் பின்னுள்ள 2-ஐ மூன்றால் பெருக்க 6 வரும். ஆக, சூரிய தசையில் செவ்வாய் புக்தி 4 மாதங்கள், 6 நாட்களாகும்.

மற்றோர் **உதாரணம்:**(குரு தசை, சனி புக்தி)

குரு தசை வருஷங்கள் 16-ஐ, சனி தசை வருஷங்கள் 19-ஆல் பெருக்க $16 \times 19 = 304$.

அதாவது 30.4 $(4 \times 3) = 12$ நாட்கள். ஆகவே, 2 வருஷம், 6 மீ, 12 நாட்கள் ஆகும்.

இம்மாதிரியே எந்தத் தசையில் எந்தக் கிரஹத்தின் காலம் தெரிய வேண்டுமானாலும் தசாநாதன் தசை வருஷத்தைப் புக்திநாதனின் தசைவருஷத்தால் பெருக்கி முன்சொன்னபடி புக்திநாதனுடைய கிரஹத்தின் காலத்தை அறியலாம்.

## புக்தியின் உபயோகம் என்ன?

ஒரு தசை ஒரு ஜாதகனுக்குக் கெடுதலாகப் பலனைத் தரும் என்று வைத்துக்கொள்வோம். உதாரணமாக, ஒருவனுக்குச் சூரிய தசை நடக்கிறது. சூரிய தசை 6 வருஷம். ஆகையால், சூரிய தசை முழுவதும் அவனுக்குக் கெடுதல் என்று வைத்துக் கொள்ளக் கூடாது. அல்லது அதே சூரியன் ஒரு ஜாதகனுக்கு நல்ல யோக பலனைக் கொடுப்பவனாக இருக்கிறான். அதனால் 6 வருஷ காலமும் அவனுக்கு நல்ல யோக பலனே நடக்கும் என்று கருதக்கூடாது.

**மற்று யாதெனில்,** சூரிய தசையில் சூரியன் முதலாகச் சுக்கிரன் வரையில் உள்ள 9 கிரஹங்களின் புக்திகள் நடக்கும். ஆகையால், அந்தப் புக்திகளில் சில புக்திகளுக்கு உரியவர்களான கிரஹங்கள் நல்ல நிலையில் இருந்தால் நல்லதும், அசுப ஸ்தானத்தில் இருந்தால் கெடுதலும் நடக்கும் என்று அறிய வேண்டும்.

ஆகையால், ஒரு தசையின் உட்பிரிவான (*Sub-period*) புக்தி காலங்களில் நற்பயனும் கெட்ட பயனும் மாறி மாறி ஏற்படும். இதை அறிவிப்பதே புக்திகளின் உபயோகமாகும்.

**குறிப்பு:** எல்லாத் தசைகளுக்கும் எல்லாக் கிரஹங்களின் புக்திகால அளவை எல்லாப் பஞ்சாங்கங்களிலும் பார்க்கலாம். ஆயினும், நேயர்களின் சௌகரியத்துக்காக, இப்புத்தகத்திலும் குறிப்பிட்ட தசாபுக்திப் பட்டியலைச் சேர்த்திருக்கிறோம்.

## ராசிகளும் நட்சத்திரப் பங்கீடும்

ராசிகள் என்றால் என்ன? பூமண்டலம் என்பது 12 சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு, 'சிம்சுமார சக்கரம்' அல்லது 'ராசிச் சக்கரம்' என்று பெயர். இந்த ராசிச் சக்கரத்திலுள்ள 12 பாகங்களுக்கும் முறையே (1) மேஷம், (2) ரிஷபம், (3) மிதுனம், (4) கடகம், (5) சிம்மம், (6) கன்னி, (7) துலாம், (8) விருச்சிகம், (9) தனுசு, (10) மகரம், (11) கும்பம், (12) மீனம் என்று பெயர்.

இந்த 12 ராசிகளுக்கும் 27 நட்சத்திரங்களைச் சம பாகமாகப் பங்கிட்டிருக்கிறார்கள். ஆக, ஒவ்வொரு

ராசிக்கும் 2¼ நட்சத்திரங்கள் அல்லது 9 நட்சத்திர பாதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும் நான்கு பாதங்கள் உண்டு.

இதன் உபயோகம்: மேற்கண்ட நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரத்தில் எந்தப் பாதத்தில் கிரஹம் இருக்கிறதோ, அந்த நட்சத்திர பாதம் எந்த ராசியைச் சேர்ந்ததோ, அந்த ராசியில் அந்தக் கிரஹத்தை எழுத வேண்டும்.

12 ராசிகளையும் அதில் அடங்கிய 27 நட்சத்திரங்களையும் கீழ்க்கண்ட சக்கரத்தில் காண்க:

| மீனம் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
|---|---|---|---|
| பூரட்டாதி 4-ம் பாதம்<br>உத்திரட்டாதி<br>ரேவதி | அசுவினி<br>பரணி<br>கிருத்திகை 1-ம் பாதம் | கிருத்திகை 2,3,4-ம் பாதம்<br>ரோகிணி<br>மிருகசீர்ஷம் 1,2-ம் பாதம் | மிருகசீர்ஷம் 3,4-ம் பாதம்<br>திருவாதிரை<br>புனர்வசு 1,2,3-ம் பாதம் |
| **கும்பம்**<br>அவிட்டம் 3,4-ம் பாதம்<br>சதயம்<br>பூரட்டாதி 1,2,3-ம் பாதம் | **ராசி மண்டலம்** | | **கடகம்**<br>புனர்வசு 4-ம் பாதம்<br>பூசம்<br>ஆயில்யம் |
| **மகரம்**<br>உத்திராடம் 2,3,4-ம் பாதம்<br>திருவோணம்<br>அவிட்டம் 1,2-ம் பாதம் | | | **சிம்மம்**<br>மகம்<br>பூரம்<br>உத்தரம் 1-ம் பாதம் |
| **தனுசு**<br>மூலம்<br>பூராடம்<br>உத்திராடம் 1-ம் பாதம் | **விருச்சிகம்**<br>விசாகம் 4-ம் பாதம்<br>அனுஷம்<br>கேட்டை | **துலாம்**<br>சித்திரை 3,4-ம் பாதம்<br>சுவாதி<br>விசாகம் 1,2,3-ம் பாதம் | **கன்னி**<br>உத்தரம் 2,3,4-ம் பாதம்<br>ஹஸ்தம்<br>சித்திரை 1,2-ம் பாதம் |

## லக்னம் என்றால் என்ன ?

ராசி என்பது 12 சமபாகமாகப் பிரிக்கப்பட்ட பூமண்டலத்தின் பாகம் என்று முன்பு சொன்னோம். சூரியன் ஏனைய கிரகங்களுடன் மேற்குப் பக்கமாகச் சுற்றுகிறது. அதே சமயத்தில் மேஷாதி 12 ராசிகளைச் சமபாகமாக உள்ள பூமண்டலமானது மேற்கிலிருந்து கிழக்குப் பக்கமாகச் சுற்றுகிறது. அப்படிச் சுற்றும்பொழுது பூமண்டலத்தின் எந்தப் பாகம், அதாவது ராசி, சூரியனுக்கு எதிராக வருகிறதோ, அந்த ராசிக்கு லக்னம் என்று பெயர்.

அந்த நேரத்தில் பிறக்கும் சிசுவுக்கு அந்த ராசியை லக்கினமென்று சொல்வார்கள். மற்றும் அப்பொழுது கிரஹங்கள் எந்த எந்த ராசியில் இருக்கின்றனவோ, அதைக் குறித்துவைத்துக் கொள்வார்கள். அதற்கே ஜாதகச் சக்கரம் அல்லது ராசிச் சக்கரம் என்று பெயர்.

இனி லக்னம், ஜாதகம், கிரஹ நிலை, தசாபுக்தி ஆகியவற்றை எல்லாம் ஓர் உதாரண மூலமாக விளக்குவோம்.

## உதாரண ஜாதகமும் தசா புக்திகளும்

விகாரி ஸு தை மாதம் 9-ஆம் தேதி வெள்ளிக்கிழமை சுவாதி நக்ஷத்திரம் 29-27 மறுநாள் விசாகம் 25-42 (23-1-1960 @ 5-40 A.M.) இரவு மணி 5-40-க்கு (சனிக்கிழமை விடியற்காலை) ஓர் ஆண் சிசு பிறந்ததை வைத்துக்கொண்டு, அதற்கு ஜாதகம் கணிக்கும் விதத்தையும் தசா புக்திகள் கணிக்கும் விதத்தையும் கீழே விளக்குவோம்.

ஒரு ஜாதகம் கணிக்கு முன் கீழ்க்கண்ட அம்சங்களை முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்:

1. சிசு எத்தனையாவது அட்சாம்சத்தில் பிறந்தது ?
2. அந்த அட்சாம்ச ரேகைக்குத் தக்கபடி மேஷாதி ராசிப் பிரமாணங்கள் என்ன ?
3. சிசு ஜனனமான தேதியில் சூரிய உதயம், எத்தனை மணி, நிமிஷத்துக்கு ஆயிற்று ?
4. சூரியோதயம் முதல் சிசு பிறந்த வரையில் எத்தனை நாழிகை எத்தனை விநாடிகள் கழிந்தன ?

5. சிசு பிறந்த நட்சத்திரத்தின் மொத்த நாழிகை என்ன ?

இவற்றைப் பஞ்சாங்கத்தின் உதவியால் முக்கியமாகக் குறித்து வைத்துக்கொண்டால் சுலபமாக ஜாதகம் கணித்துவிடலாம்.

இந்தச் சிசு சென்னையில் பிறந்தது.

சென்னையின் அட்சாம்சம் 13. சென்னையில் அன்றைய சூரிய உதயம் 6-39. தை மீ 9-ஆம் தேதி வெள்ளிக்கிழமை. சிசு வோ விடியற்காலை மணி 5-40-க்குப் பிறந்தது. அதாவது சனிக்கிழமை உதயத்துக்கு முன் 0·59 நிமிஷங்களுக்கு முன்னதாகப் பிறந்தது. நம் நாட்டு வழக்கப்படி சூரிய உதயத்திலிருந்து அடுத்த சூரிய உதயம் வரையில் ஒரு நாள் என்று கணக்கிடப்படுவதனால், வெள்ளிக்கிழமை சூரிய உதயம் முதல்சிசு பிறந்த நாழிகை விநாடிகள் வரையில் கணக்கிட வேண்டும். அது முதல் சனிக்கிழமை விடியற் காலை 5-40 வரையில் 23 மணி 1 நிமிஷம் ஆயிற்று. மணி ஒன்றுக்கு 2½ நாழிகை வீதம் கணக்கிட, 57 நாழிகை 33 விநாடிகள் வரும். ஆகையால், வெள்ளிக்கிழமை சூரிய உதயாதி நாழிகை 57-33-க்கு அந்தச் சிசுவின் ஜனனம் என்று அறிய வேண்டும்.

## அட்சாம்சங்களும் ராசிப் பிரமாணமும்

மேஷம் முதல் மீனம் வரையிலான 12 ராசிகளை 360 சமபாகங்களாகப் (அதாவது ராசி ஒன்றுக்கு 30 பாகைகளாகப்) பிரித்திருக்கிறார்கள். இவற்றுக்கு அட்சாம்சம் (*Latitude*) என்று பெயர். பூமிமுழுவதும் இந்த அட்சாம்ச ரேகைகளின் மீதே இருக்கிறது. அந்த அந்த அட்சாம்சங்களிலுள்ள பட்டணங்களுக்கு வெவ்வேறு ராசிமான சங்கியைகள் (அதாவது நாழிகை, விநாடிகள்) ஏற்பட்டுள்ளன. இந்த அட்சாம்சங்களை அநுசரித்தே மேஷாதி ராசிகளின் கால அளவை அறிய வேண்டும். உதாரணமாக, சென்னையும், அதைச் சுற்றிலும் சுமார் 100 மைல்களுக்கு உட்பட்ட பிரதேசங்களும் 13-ஆவது அட்சாம்சத்தில் இருக்கின்றன. ஆகையால், இந்த 13-வது அட்சாம்சத்தைச் சேர்ந்த இடங்களுக்கு மேஷ ராசிப் பிரமாணம் 4 நா. 29 வி. ஆனால் இதே மேஷ ராசிக்கு

9-ஆவது அட்சாம்சத்தில் இருக்கும் ராமேசுவரத்துக்கு 4-37 விநாடியாகும்.

இம்மாதிரி, இடத்துக்கு இடம் மேஷாதி ராசிப் பிரமாணங்கள் மாறுபடும். ஆகையால், ஒரு சிசு பிறந்த இடம் எந்த அட்சாம்சத்தில் சேர்ந்ததோ அந்த அட்சாம்சத்துக்குரிய மேஷாதிராசிப் பிரமாணங்களைச் சூரியோதயம் முதலாகச் சிசு ஜனன காலம் வரையில் கூட்டி லக்கினத்தை அறிய வேண்டும். இதைக் கவனிக்கா விட்டால் சரியான ஜாதகம் கணிக்க இயலாது.

சூரியன் உதயகாலத்தில் எந்த ராசியில் இருக்கிருனே, அதுவே உதயலக்னம் என்று கூறப்படும். மேற்படி உதய லக்ன நாழிகை சூரியோதய காலத்தில் குறைந்து கொண்டே வரும். அதாவது, தமிழ் மாதமான சித்திரை மாதத்தின் முதல் தேதியன்று சூரிய உதய காலத்தில் மேஷ ராசியில் இருப்பு 13-வது அட்சாம்சத்தைச் சேர்ந்த சென்னையில் 4-29 என்றால் 2-ஆம் தேதி மேஷத்தின் இருப்பு 4-20. இம்மாதிரி ஒவ்வொரு தேதிக்கும் சூரிய உதய காலத்தில் 0-9 விநாடி வீதம் கழித்துக் கொண்டே போக வேண்டும்.

அப்படிக் கழித்தது போக மீதி நாழிகை விநாடியே உதய லக்ன சேஷமாகும். பிறகு ஜனன கால நாழிகை விநாடிகள் வரும்வரை ஒவ்வொரு ராசியாகக் கூட்டிக் கொண்டே போனால், எந்த ராசிப் பிரமாணத்தில் ஜனன கால நாழிகை அடங்குமோ அதுவே அந்தச் சிசு ஜனித்த ஜனன லக்னம் என்று அறிய வேண்டும்.

## லக்னம் கணிக்கும் வழி

இந்தச் சிசு பிறந்தது தை மாதம் 9-ஆம் தேதி இரவு ஆகையால் தை மாதம் 9-ஆம் தேதிக்குச் சரியாக (தை மாதத்திற்குரிய) மகரராசியின் சேஷத்தைப் பஞ்சாங்கத்தில் உள்ளபடி குறித்துக்கொள்ள வேண்டும். அதன் கீழ்க் கும்பம் முதலாக, ஜனன கால நாழிகை வரும் வரையில் ராசி மான சங்கியைகளை எழுதிக் கூட்டிக் கொள்ள வேண்டும். ராசி மான சங்கியைகள் 13-ஆவது (அதாவது சென்னையின்) அட்சாம்சத்திற்குரியன. பஞ்சாங்கத்தில் உள்ளபடி எழுதவேண்டும். அதாவது:— தை 9-ஆம் தேதி சூரிய உதயத்திற்கு,

| | | நா.-வி. |
|---|---|---|
| மகர சேஷம் | ... | 3-32 |
| கும்பம் | ... | 4-17 |
| மீனம் | ... | 4-11 |
| மேஷம் | ... | 4-29 |
| ரிஷபம் | ... | 5-05 |
| மிதுனம் | ... | 5-28 |
| கடகம் | ... | 5-22 |
| சிம்மம் | ... | 5-08 |
| கன்னி | ... | 5-04 |
| துலாம் | ... | 5-16 |
| விருச்சிகம் | ... | 5-28 |
| தனுசு | ... | 5-19 |
| | | 58-39 |

ஜனன கால நாழிகையான 57-33, மேற்கண்ட தனுசு ராசி வரையிலுள்ள 58-39-க்கு உட்பட்டிருப்பதால், இந்தச் சிசு தனூர் லக்னத்தில் பிறந்ததாகும். அதாவது சிசுவின் ஜன்மலக்னம் தனுசு என்று அறிய வேண்டும். இனி அந்தச் சிசுவின் ஜனன காலத்தில் கிரகங்கள் எந்த நிலையில் இருந்தன என்பதைக் கவனிப்போம் :—

பஞ்சாங்கத்தில் **கிரகபாதசாரங்கள்** என்னும் அட்டவணையில் கண்டபடி தை மாதம் 9-ஆம் தேதி கிரகங்கள் கீழ்க்கண்டபடி நக்ஷத்திரபாதங்களில் சஞ்சரிக்கும்.

| | | |
|---|---|---|
| சூரியன் | உத்திராடம் | 4- ஆம் பாதம் |
| *சந்திரன் | விசாகம் | 2 ,, |
| செவ்வாய் | மூலம் | 4 ,, |
| புதன் | உத்திராடம் | 3 ,, |
| குரு | மூலம் | 1 ,, |
| சுக்கிரன் | மூலம் | 1 ,, |
| சனி | பூராடம் | 2 ,, |
| ராகு | உத்திரம் | 3 ,, |
| கேது | உத்திரட்டாதி | 1 ,, |

மேற்கண்ட சாரங்களை யொட்டி ஜாதகச் சக்கரத்தைக் கீழ்க்கண்டபடி அமைப்போம்.

* ஜன்ம நக்ஷத்திரத்தைக்கொண்டு கணக்கிடவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| கேது | | | |
| | ராசி சக்கரம் | | |
| சூரியன் புதன் | | | |
| லக்னம் செவ்வாய் குரு சுக்கிரன் சனி | | சந்திரன் | ராகு |

இனி ஜன்ம நட்சத்திரத்தை அநுசரித்து, தசா சேஷத்தைக் கணிப்போமாக:

தை மாதம் 9-ஆம் தேதி வெள்ளிக்கிழமை சூரியோதயத்திலிருந்து 29-27 நாழிகை வரை சுவாதி நக்ஷத்திரம் இருக்கிறது. பிறகு விசாக நக்ஷத்திரம் ஆரம்பம். ஜாதகன் சூரிய உதயாதி 57 நாழிகை 33 விநாடிகளுக்குப் பிறந்திருப்பதால் ஜனனகாலம் சுவாதி கழிந்து விசாக நக்ஷத்திரம் என்று தெரிகிறது. இனி விசாக நக்ஷத்திரத்தின் ஆத்யந்த பரம நாழிகை அதாவது மொத்த நாழிகை என்ன என்று தெரிந்தால் தசாசேஷம் கணிக்கலாம். ஒரு தினத்துக்கு 60-00 நாழிகைகள். அதில் 9-ஆம் தேதி சுவாதி இருப்பு 29-27 போக,

தை 9-ஆம் தேதி விசாக நக்ஷத்திரம் 30-33.

மறுநாள் தை 10-ஆம் தேதி விசாகம் (பஞ்சாங்கத்தில் உள்ளபடி) 25-42. ஆகையால்,

விசாகம் மொத்த நாழிகை 56-15 ஆகும்.

ஜனன நாழிகை 57-33

அன்று சுவாதி செல்லு 29-27

(ஜனன தினத்தன்று) 9-ஆம் தேதி 28-06

விசாகத்தில் செல்லு

இதை விசாகம் மொத்த

நாழிகை 56-15-ல்

செல்லு 28-06-ஐக் கழிக்க

ஜனன காலத்தில்

விசாகம் இருப்பு 28-09

மற்றொரு விதம்:

9-ஆம் தேதி சுவாதி இருப்பு அல்லது விசாகம் ஆரம்பம் 29-27

மறுநாள் விசாகம் முடிவு 25-42

3-45

விசாகம் 9-ஆம் தேதி 29-27 விநாடி முதல் மறுநாள் 29-27 விநாடி வரையில் 60-00. ஆனால், விசாகம் 25-42 விநாடி வரையில்தான் உள்ளது. (வித்தியாசம் குறைவு 3-45)

ஒரு நாளின் மொத்த நாழிகை 60-00

குறைவு 3-45

விசாகம் ஆதியந்தம் பரம நாழிகை 56-15

ஆகையால், மேற்கண்ட விசாக நக்ஷத்திரத்தின் சேஷம் 28 நாழிகை 9 விநாடிகளுக்கு தசாசேஷம் கணிக்க வேண்டும்.

முன்பு குறிப்பிட்டபடி விசாக நட்சத்திரத்துக்கு, குரு தசை ஆரம்பம். குரு தசை 16 வருஷங்கள். விசாக நட்சத்திரம் நாழிகை 56-15-க்கு 16 வருஷங்களானால் 28-09-க்குத் தசாசேஷம் என்ன என்பதைக் கீழ்க் கண்ட விதமாகக் கணிக்கலாம்.

அதாவது,

விசாகம் மொத்த நாழிகை 56-15 × 60

3360 விநாடி
15

3375

2. விசாகம் செல்லு போக இருப்பு 28-09 × 60

1680
9

1689 விநாடி

மேற்கண்ட இருப்பு விநாடிகளைக் குரு தசா வருஷத்தால் பெருக்க வேண்டும். அந்த மொத்தத்தை விசாகம் மொத்த விநாடிகளால் வகுக்க வருடங்கள் வரும். மீதியை 12-ஆல் பெருக்கி மொத்த விநாடிகளால் வகுத்தது மாதம். 30-ஆல் பெருக்கி வகுத்தது நாட்கள். இவ்விதமாக தசா சேஷம் வரும்.

1689 × 16

3375) 27024 (8 வரு
27000

24 × 12

288 × 30

3375) 8640 (2+1=3 நா.
6750

1890 பாதிக்குமேல் இருந்தால் 1 ஆகச் சேர்க்க வேண்டும்.

ஆக ஜனன காலத்தில் குருதசை சேஷம் 8 வரு 0 மீ 3 நா. அதாவது இந்தச் சிசு கர்ப்பத்தில் இருக்கும்போதே விசாக நட்சத்திரத்தில் பாதி பாகம் கழிந்துவிட்டபடியால், அதற்கு உரிய குருதசை 16 வருஷத்தில் சுமார்

பாதி கழிந்து 8 வருஷம் 3 நாட்கள் மாத்திரமே பாக்கி இருக்கின்றன.

ஆகையால், புக்திகளைக் கணிக்கும் வழியில் கணிக்க. ஜனனகாலத்தில் குரு தசையில் குரு, சனி, புதன், கேது புக்திகள் செல்லாகிவிட்டன. சுக்கிர புக்தியிலும் 1 மாதம் 15 நாட்கள் செல்லாகிவிட்டன. ஆகவே, ஜனன காலத்தில் கர்ப்பத்தில் குரு தசை செல்லு விவரம் வருமாறு:

**உதாரண ஜாதகத்துக்குத் தசாபுக்திகள் விவரம்:**

| கிரஹ தசை | கிரஹ புக்தி | புக்தி கால அளவு | புக்தி நடக்கும் காலம் முதல் | புக்தி நடக்கும் காலம் வரையிலும் |
|---|---|---|---|---|
| குரு தசை | சுக்கிர புக்தி (சேஷம்) | ஸ்.மா.நா. 2— 6—15 | ஸ். மா. நா. 1960— 1—23 | ஸ். மா. நா. 1962– 8— 8 |
| | சூரியன் | 0— 9—18 | 1962— 8— 9 | 1963– 5—26 |
| | சந்திரன் | 1— 4— 0 | 1963— 5—27 | 1964– 9—26 |
| | செவ்வாய் | 0— 11— 6 | 1964— 9—27 | 1965– 9—2 |
| | ராகு | 2— 4—24 | 1965— 9— 3 | 1968– 1—26 |
| சனி தசை (19 ஸ்) | சனி புக்தி | 3— 0— 3 | 1968— 1—27 | 1971– 1—29 |
| | புதன் | 2— 8— 9 | 1971— 1—30 | 1973–10— 8 |
| | கேது | 1— 1— 9 | 1973—10— 9 | 1974–11—17 |
| | சுக்கிரன் | 3— 2— 0 | 1974—11—18 | 1978– 1—17 |
| | சூரியன் | 0— 11—12 | 1978— 1—18 | 1978–12—29 |
| | சந்திரன் | 1— 7— 0 | 1978—12—30 | 1980– 7—29 |
| | செவ்வாய் | 1— 1— 9 | 1980— 7—30 | 1981– 9— 8 |
| | ராகு | 2— 10— 6 | 1981— 9— 9 | 1984– 7—14 |
| | குரு | 2— 6—12 | 1984— 7—15 | 1987– 1—26 |

இதன் பிறகு நடக்கும் புதன், கேது, சுக்கிரன், சூரியன் முதலிய தசைகளுக்குரிய புக்திகாலங்களை முன்பு புக்தி கண்டுபிடிக்கும் வழியில் சொல்லியுள்ளபடி கணித்துக் கூட்டித் தெரிந்துகொண்டு அததற்குரிய ராமாயண ஸர்க்கத்தைப் பாராயணம் செய்ய வேண்டும்.

அவரவர்கள் ஜாதகப்படி தற்காலம் நடக்கும் தசை என்ன, புக்தி என்ன என்பதைச் சோதிடர் மூலமாகவோ, அல்லது 'தசாபுக்திகளைக் கணிக்கும் வழி' என்று இப்புத்தகத்தில் இதற்கு முன் சொல்லியுள்ள விஷயத்தை நன்றாகப் படித்துத் தாமாகவோ (நல்ல பஞ்சாங்கங்களைப் பார்த்து) கணித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

மொத்தம் 9 தசைகள். ஆகையால், 9 புத்தகங்கள் தனித்தனியாக அச்சிடப்பட்டிருக்கின்றன.

## பாராயணம் செய்யும் முறை

தம் தசைக்குத் தேவையான புத்தகம் கிடைத்தவுடன், ஒரு நல்ல நாள் பார்த்துப் பாராயணத்தை ஆரம்பித்து விட வேண்டும். தினந்தோறும் காலையில் காலைக் கடன்களை முடித்துவிட்டு ஸ்நானம், சந்தியாவந்தனம் முதலியவற்றைச் செய்து ஸ்வாமி ஸந்நிதியிலோ, கோயிலிலோ, ஸ்வாமி படத்தின் எதிரிலோ, சுத்தமான இடத்திலோ உட்கார்ந்து, ஈடுபாட்டுடன் தனக்கு எந்தத் தசை எந்தப் புக்திக்கு எந்த ஸர்க்கம் அல்லது ஸர்க்கங்கள் பாராயணம் செய்ய வேண்டுமோ அவற்றைப் படிக்க வேண்டும். க்ரந்த எழுத்து அல்லது நாகர எழுத்து தெரிந்தவர்கள் வால்மீகி ராமாயண ஶ்லோகங்களையே படிக்கலாம். அது தெரியாதவர்கள் இதிலுள்ள மேற்படி இராமாயண ஸர்க்கத்தின் தமிழ் மொழிபெயர்ப்பைப் படித்தலே போதுமானது.

> குறிப்பு: மேலே கூறியபடி பாராயணம் செய்ய வசதி இல்லாதவர்கள், தினமும் எப்போது ஓய்விருந்தாலும் அப்போது, பூரண நம்பிக்கையுடன், பாராயணம் செய்வதும் போதும்.

இந்த மொழிபெயர்ப்பானது பேரும் புகழும் பெற்றிருந்த கீர்த்தனாசார்ய ஸி. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியால் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திற்கு ஸம்பிரதாய சுத்தமான பாஷையில் நன்றாகச் செய்யப்பட்டுப் பெரியோர்களால் கொண்டாடப்பட்டதாகும். ஆகையால், மூல ஶ்லோகங்களுக்கு உள்ள மகிமை இந்த மொழிபெயர்ப்புக்கும் உண்டென்பது திண்ணம்.

தியான ஶ்லோகங்களைப் படித்த பிறகு, அந்தந்த தசைக்கு ஏற்பட்ட நிவேதனப் பொருளை ஸ்வாமிக்கு நிவேதனம் செய்து கர்ப்பூர ஹாரத்தி செய்து

அந்த அந்தத் தசாநாதனுக்குப் பொதுவாக ஏற்பட்டுள்ள ஸர்க்கத்தைப் பாராயணம் செய்தபிறகு, தற்காலம் நடக்கும் புக்திக்கு உரிய ஸர்க்கத்தைப் படிக்க வேண்டும். பாராயணம் முடிந்த பிறகு, புக்திக்குரிய பொருளை நிவேதனம் செய்து, மங்கள சுலோகங்களைப் படிக்க வேண்டும்.

இப்புத்தகத்தில் ஸ்ரீ ராம பட்டாபிஷேகப் படமும், ஸ்ரீ சூரிய பகவான் படமும், நவக்கிரஹப் படமும், ஸ்ரீராமர் ஜாதகமும் தரப்பட்டிருக்கின்றன. இந்தத் திருவுருவங்களையும், நவக்கிரஹங்களின் செயல்களுக்குச் சிறந்த உதாரணமாக இருக்கும் ஸ்ரீராமருடைய திவ்ய ஜாதகத்தையும் பிரதி தினமும் பூஜித்து ஸேவித்தால் ஸகல நன்மைகளும் உண்டாகுமென்பது நம் முன்னோர்கள் கண்ட உண்மை.

ஆகையால், அவற்றைத் தினமும் பக்தியுடன் பூஜித்துப் பாக்யங்கள் எல்லாம் பெறுவோமாக!

## குடும்பத்தவர் கவனத்துக்கு

நம் ஹிந்து மதப்படி ஒரு குழந்தை பிறந்ததும் அதன் ஜாதகத்தைக் கணித்துப் பலன்களை அறிந்து கொள்வது ஸம்பிரதாயமாகும். இந்த ஸம்பிரதாயப்படி உங்கள் குடும்பத்திலுள்ள அனைவரின் ஜாதகங்களும் சரியானபடி கணித்து வைக்கப்பட்டிருக்கின்றனவா என்பதை உடனே கவனியுங்கள். ஒவ்வொரு குடும்பத்திலும், எல்லோருடைய ஜாதகங்களையும் ஒரு பைண்டு நோட்டில் எழுதி வைத்துக்கொள்வது இன்றியமையாததாகும்.

உங்கள் குடும்பத்தில் யாராவது ஒருவருக்கு இது வரை ஜாதகம் எழுதவில்லையென்றால், அவர் பிறந்த வருஷம், மாதம், தேதி, நேரம், இடம் முதலியவற்றைப் பழைய குறிப்பிலிருந்து அறிந்து ஒரு தேர்ந்த சோதிடர் மூலம் அன்னாருடைய ஜாதகத்தைக் கணித்து வைத்துக் கொள்ளுங்கள். ஏனென்றால், இந்த ஸ்ரீமத் ராமாயண பாராயணத்துக்கு ஒவ்வொருவருடைய ஜாதகமும் ஜனன கால தசா புக்தி இருப்பும் தற்காலம் நடக்கும் தசா புக்திகளும் இதற்கு முன் சொன்னபடி தெரிந்து கொள்வது அவசியமாகும்.

## இந்நூலுக்கு ஆதாரம்

ஸ்ரீ வியாஸ பகவான் பதினெட்டுப் புராணங்களை அருளிச் செய்திருக்கிறார். அந்தப் புராணங்களை அநுசரித்து

உப புராணங்கள் என்ற பெயருடன் கிரந்தங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. அவற்றில் வாயு புராணத்தைச் சேர்ந்த உப புராணமாகிய 'உமா ஸம்ஹிதை' என்ற கிரந்தத்தில் சூரியன் முதலான 9 கிரகங்களின் தசைகளிலும் அந்த அந்தக் கிரக தசையில் அடங்கிய 9 புக்திகளிலும், ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தின் குறிப்பிட்ட ஸர்க்கங்களைப் பாராயணம் செய்ய வேண்டுமென்று ஸ்ரீபார்வதி பரமேசுவரர்கள் சம்பாஷணையில் விரிவாக எழுதப்பட்டிருக்கின்றதாம். இந்த 'உமா ஸம்ஹிதை' என்றபுராணமானது நம் நாட்டில் சிலரிடம் ஓலைச் சுவடிகளில் கிடைக்கிறது. அதை இதுவரை யாரும் முழுவதும் அச்சிட்டிருக்கவில்லை. ஆயினும், இந்த ஓலைச் சுவடியை ஆதாரமாகக் கொண்டு தசாபுக்தி பாராயணங்களின் பிரமாண சுலோகங்களைச் சிலர் அச்சிட்டிருக்கிறார்கள்.

ஆகையால், மேற்கண்ட பிரமாண சுலோகங்களை அநுசரித்து எந்த எந்தத் தசாபுக்தியில் ராமாயணத்தில் எந்த எந்த ஸர்க்கம் பாராயணம் செய்யவேண்டும், அதற்கு நிவேதனம் என்ன என்பதை மாத்திரம் விவரமாகக் கட்டங்களில் அமைத்திருக்கிறோம். அதன்படி அவரவர்கள் தசாபுக்திகளுக்கிணங்க ராமாயண ஸர்க்கங்களைத் தினந்தோறும் பாராயணம் செய்வது மிக அவசியமாகும்.

அவ்விதம் பக்தியுடனும், சிரத்தையுடனும் பாராயணம் செய்பவர்கள், ஜகன்மாதாவான ஸ்ரீ ஜானகி தேவி, லோகபிதாவான ஸ்ரீ ராமபிரான், ஸ்ரீ ராமபக்த சிரோமணி ஸ்ரீ ஆஞ்சனேயர் ஆகியவர்களின் அநுக்கிரஹத்தால் புத்திர பௌத்திராதி விருத்தியுடன் ஸகல ஸௌபாக்கியங்களையும் பெற்று, இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் இனிதே அடைவார்கள்.

## முக்கியமான த்யான சுலோகங்கள்

மேற்படி பாராயணம் செய்வதற்கு முன்பு, கீழ்க்கண்ட த்யான சுலோகங்களைப் படிக்கவேண்டும்:—

### ஸ்ரீ வால்மீகி

கூஜந்தம் ராம ராமேதி மதுரம் மதுராக்ஷரம் ।
ஆருஹ்ய கவிதா சாகாம் வந்தே வால்மீகி கோகிலம் ॥
வால்மீகேர் முநிஸிம்ஹஸ்ய கவிதா வந சாரிண: ।
ச்ருண்வன் ராமகதா நாதம் கோ ந யாதி பராம்கதிம் ॥

**ஹனுமான்**

கோஷ்பதீக்ருத வாராசிம் மசகீக்ருத ராக்ஷஸம் ।
ராமாயண மஹாமாலா ரத்நம் வந்தே(அ)நிலாத்மஜம் ॥
யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்
தத்ர தத்ர க்ருத மஸ்தகாஞ்ஜலிம் ।
பாஷ்ப வாரி பரிபூர்ண லோசநம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ॥

**ஸ்ரீராமன்**

வைதேஹீ ஸஹிதம் ஸுரத்ரும தலே ஹைமே
மஹாமண்டபே
மத்யே புஷ்பகமாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்த்திதம் ।
அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜந ஸுதே தத்வம் முனிப்ய: பரம்
வ்யாக்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே
ச்யாமளம் ॥

## முக்கியமான மங்கள சுலோகங்கள்

பாராயணம் முடிந்த பிறகு, கீழ்க்கண்ட சுலோகங்களைப் படிக்கவேண்டும்:

ஸ்வஸ்தி ப்ரஜாப்ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேன மார்கேண மஹீம் மஹீசா: ।
கோப்ராஹ்மணேப்ய: சுபமஸ்து நித்யம்
லோகாஸ் ஸமஸ்தாஸ் ஸுகிநோ பவந்து ॥
காலே வர்ஷது பர்ஜந்ய: ப்ருதிவீ ஸஸ்யசாலிநீ ।
தேசோயம் க்ஷோப ரஹித: ப்ராஹ்மணாஸ் ஸந்து
நிர்ப்பயா: ॥
மங்களம் கோஸலேந்த்ராய மஹநீய குணாப்தயே ।
சக்ரவர்த்தி தநூஜாய ஸார்வபௌமாய மங்களம் ॥
வேத வேதாந்த வேத்யாய மேக ச்யாமள மூர்த்தயே ।
பும்ஸாம் மோஹந ரூபாய புண்ய ச்லோகாய மங்களம் ॥
விச்வாமித்ராந்தரங்காய மிதிலா நகரீ பதே: ।
பாக்யாநாம் பரிபாகாய பவ்ய ரூபாய மங்களம் ॥
பித்ரு பக்தாய ஸததம் ப்ராத்ருபிஸ் ஸஹ ஸீதயா ।
நந்திதாகிலலோகாய ராமபத்ராய மங்களம் ॥
த்யக்த ஸாகேத வாஸாய சித்ரகூட விஹாரிணே ।
ஸேவ்யாய ஸர்வ யமிநாம் தீரோதாராய மங்களம் ॥
ஸௌமித்ரிணா ச ஜானக்யா சாபபாணாஸி தாரிணே ।
ஸம்ஸேவ்யாய ஸதா பக்த்யா ஸ்வாமிநே மம மங்களம் ॥
தண்டகாரண்யவாஸாய கண்டிதாமரசத்ரவே ।
க்ருத்ர ராஜாய பக்தாய முக்திதாயாஸ்து மங்களம் ॥

ஸாதரம் சபரீ தத்த பல மூலாபிலாஷிணே ।
ஸௌலப்ய பரிபூர்ணாய ஸத்வோத்ரிக்தாய மங்களம் ॥
ஹநுமத் ஸமவேதாய ஹரீசாபீஷ்ட தாயிநே ।
வாலி ப்ரமதநாயாஸ்து மஹாதீராய மங்களம் ॥

ஸ்ரீமதே ரகுவீராய ஸேதூல்லங்கித ஸிந்தவே ।
ஜித ராக்ஷஸ ராஜாய ரண தீராய மங்களம் ॥
ஆஸாத்ய நகரீம் திவ்யாம் அபிஷிக்தாய ஸீதயா ।
ராஜாதிராஜ ராஜாய ராமபத்ராய மங்களம் ॥
மங்களாசாஸந பரை: மதாசார்ய புரோகமை: ।
ஸர்வைஸ்ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து
மங்களம் ॥

# நெற்றிக் குறி இடுதல்

அந்த நாட்களில் நம் மக்கள் ஸ்நானம் செய்தவுடன் நெற்றியில் விபூதி, திருமண் போன்ற தெய்வச் சின்னங்களைத் தவறாமல் இட்டு வந்தார்கள். இவற்றின் தத்துவம் என்ன?



**"ஏ பக்தா! நீ மண்ணிலிருந்து வந்தவன். உன் உடல் ஒரு மண் பாண்டம். என்றாவது ஒரு நாள் நீ மண்ணிற்குத் திரும்புவது திண்ணம். எனவே, திருமண், விபூதி இவற்றைக் குழைக்கும் ஸமயம் உன் அநித்யத்துவமும் நானும் உனக்கு ஞாபகம் வரட்டும். கூடிய வரை, பிறர்க்கு உபகாரம் செய். ஸ்வய நலத்தைக் குறைத்துக்கொள்!"**

என்று இவைகளின் மூலம் பகவான் நமக்குக் கூறுகிறார் போலும்.



தவிர, எவனொருவனுடைய நெற்றியில் இந்தத் தெய்வீகச் சின்னம் எப்பொழுதும் இருக்கிறதோ, எவன் வீட்டு முன் வாயிலில் இந்தச் சின்னங்கள் பொறிக்கப்பட்டு இருக்கின்றனவோ, அம்மனிதனுக்கும், அந்த வீட்டிற்கும் கடவுள் அருள் பரிபூரணமாக இருக்கும் என்று நம்பி, நம் முன்னோர்கள் ஆனந்தமாக வாழ்ந்து வந்தார்கள் அக்காலத்தில்.

இன்று நெற்றிக்கு இடுவதை அவமானமாகக் கருதலானோம். அந்நாட்களில்

வைஷ்ணவர் வீட்டு வாசல்களில் திருமண், சங்கு, சக்கரத்துடன் கூடிய சின்னங்கள் பொறித்து வைக்கப்பட்டிருப்பது வழக்கம்.



இப்போது அவர்கள் கட்டும் ...களிலும் இதை மறந்து ஒழிந்தனர்.

...ல்லா நெற்றி பாழ்: நெய்யில்லா உண்டி பாழ்"

என்பது ஔவைப் பிராட்டியின் அருள்வாக்கன்றோ! ஆதலின் நாமும் நீராடியவுடன் நெற்றியில் விபூதி, திருமண், கோபி சந்தனம் போன்ற சின்னங்களைத் தவறாமல் அணிவதுடன் நாம் வசிக்கும் வீடுகளிலும் இத்தகைய சின்னங்களை முன்வாயிலில் பொறித்து வைக்கவேண்டும்.



பல பிறவிகளில் செய்த புண்ணியப் பயனைப் பெற்ற அரிய இம்மனித உடல் அழியக்கூடியதாதலின் அழியா இன்பத்தையடைய ஒவ்வொருவரும் பாடுபட்டு உய்ய வேண்டும் என அறிவிப்பதே இச்சின்னம் என்பது நம் முன்னோர் நம்பிக்கை.



"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ தும்கண்டு மேலுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லால்பொன்னி னம்பலவன்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரிலையே."

என்ற பட்டினத்தார் பாடலும் இக்கருத்தை வலியுறுத்தும்.

## விபூதி

ஆணவம், கன்மம், மாயை என்னும் முக்குற்றங்களும் அகலவேண்டும் என்று கருதி வலக்கை நடுவிரல் மூன்றினாலும் வடக்கு அல்லது கிழக்கு முகமாக இருந்து நெற்றியில் மூன்று கோடு வடிவமாக விபூதி என்னும் பஸ்மத்தை அணிதல் வேண்டும். விபூதியை அணியும் போது அது நிலத்தில் சிந்தா வண்ணம் அண்ணாந்து "ஓம் சிவ சிவ" என்று கூறி அணிதல் முறையாகும்.



விபூதியே பஸ்மம். விபூதியே சிவம். சிவமே பஸ்மம். தான் பஸ்மமாய் இருந்து நாஸ்திகத்தையும் பஸ்மம் செய்வது விபூதி.

"மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்திர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன்திரு வாலவா யான்திரு நீறே"

என்பது சம்பந்தர் அருள்மொழியாகும்.

## திருமண்

இவ்வாறே நெற்றியில் திருமண் காப்பு அணிதலும் நம் முன்னோர் வழக்கமாகும். திருமண் காப்பு என்னும் சொல்லே, திருமண் இடுதல் நமக்கு ஒரு ரக்ஷையாக அமைவதைக் குறிக்கும். இவை தெய்வ பக்தியைக் குறிக்கும் அடையாளங்கள். திருமண் திருமாலின் பக்தியையும் இடையில் அணியும் ஸ்ரீசூர்ணம் திருமகள் பக்தியையும் குறிக்கும். அது திருமாலின் திருவடி வடிவமாக அமையவேண்டும் என்பதைக் கீழ் வரும் சுலோகம் நன்கு விளக்குவதாம்:





"பரஸ்ய பும்ஸ: பதஸந்நிவேசான்
ப்ரயுஞ்ஜதே பாவித பஞ்ச ராத்ரா: |
அகப்ரதீபான் அபதிச்ய புண்ட்ரான்
அங்கேஷு ரங்கேசய பாதுகே த்வாம் ||"

— பாதுகாஸஹஸ்ரம்.

பாஞ்சராத்ரம் முதலிய ஆகம நூல்களைக் கற்றுணர்ந்த பெரியோர்தம் உடலில் அணியும் புண்ட்ரங்கள் (குறிகள்) திருமாலின் பாதுகை வடிவமானவை என்பதும், அதனால் பாவங்கள் யாவும் நீங்கும் என்பதும் இந்த சுலோகத்தின் கருத்தாகும்.

**" அதோர்த்வ கதிகாஞம் து ஊர்த்வபுண்ட்ரஸ்ய தாரணம் "**

என்பதனால் நெற்றியில் மேல் நோக்கி இடப்படும் சின்னம் உயர்கதியடைவதைக் குறிப்பதாகும் என்பதும் அறியப்படும். இச்சின்னங்களை அணியாமல் செய்யும் எந்த நற் செயலும் பயன் தராது. திருமாலும் தான் இராமனாக அவதரித்தபோது இச்சின்னத்தை அணிந்தார் என்றால் இதன் சிறப்பை வேறு கூறவும் வேண்டுமோ!

**" என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்**
**நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி**
**சென்று மீளாக்குறி சேரச் சேர்த்திடும்**
**தன்திரு நாமத்தைத் தானும் சாத்தியே. "**

**— கம்ப ராமாயணம்.**

என்பது கம்பர் திருவாக்கு.

ஸ்ரீ ராமன் சீதாப்பிராட்டியை மணந்துகொள்வதற்கு மங்கள ஸ்நானம் செய்தபின் தன் மரபிற்கு ஏற்பத் திரு நாமத்தையும் அணிந்தார். அத்திருநாமம் பிரமன் முதலான எல்லா ஜீவராசிகளிடமும் நிறைந்துள்ள அஞ்ஞானத்தை நீக்கி அர்ச்சிராதி மோக்ஷ மார்க்கத்தில் ஜீவனை அழைத்துச் சென்று மீண்டும் திரும்பிவராத வீட்டின்பத்தைச் சேர்த்துவைக்கும் என்பது இதன் கருத்தாம்.

**" யேவா லலாட பலகே லஸதூர்த்வ புண்ட்ரா: தே வைஷ்ணவா: "**

என்று நெற்றியில் திருமண் விளங்குவதே திருமால் அடியவரின் சிறப்பு என்று வியாஸரும் கூறியுள்ளார். இத்தகைய அடியவர்களைக் கண்டால் யம தூதர்களும் அஞ்சுகின்றனர் என்பர் முனிவர்.

**" நீறு செவ்வே இடக்காணில் நெடுமாலடியார் என்றோடும் "**

என்று நம்மாழ்வாரும், திருமண் காப்பை நேராக நெற்றியில் அணிபவரைக் கண்டால், தலைவி திருமாலாகவே கருதி அவரைப் பின்தொடர்வதாகக் குறிக்கிறார்.

மேலும் நெற்றியில் திருமண் முதலியன தரிப்பது எல்லா நாடிகளும் சேருமிடமான நெற்றி, நாடிகளின் கெட்ட நீரை வற்றச் செய்து ஆரோக்கியத்தையும் கொடுக்கும் என்பது வைத்திய நூலிலும் குறிக்கப்படுகிறது*.

இவற்றால் உலகில் பிறந்த யாவரும் தத்தம் முன்னோர்கள் அணிந்தவாறு விபூதியோ, திருமண்ணோ, கோபி சந்தனமோ அணியவேண்டுவது அவசியம் என்பது தெற்றென விளங்கும் அன்றோ? நாமும் நம் முன்னோர் ஒழுகிய முறைப்படி நெற்றிக் குறியணிந்து நலம் பல பெறுவோமாக.

அந்தோ! வைஷ்ணவக் குழந்தைகள் பலர் இந்நாளில் நெற்றிக்கு ஏதும் தரிப்பதில்லை. தரித்துக்கொள்ளும் சில இளைஞர்களும், ஸ்ரீசூர்ணம் மட்டும் இட்டுக் கொள்கிறார்கள். ஒன்றுமே இட்டுக் கொள்ளாதவர்கள், நம் லோக மாதா, லோகபிதாக்களை மறந்தவர்களாகவும், ஸ்ரீசூர்ணம் மட்டும் தரிப்பவர்கள் தந்தையை விட்டுத் தாயைப் பிரிப்பவர்களாகவும் ஆகிறார்கள்! நம் பாபங்களைப் போக்கி, இகபரசுகம் எய்துதற்குத் துணை புரியும் எளிய வழிகளையும் அலட்சியம் செய்து வரும் நம் சிறுவர்களைக் கண்டு, பரிதாபப்படுவதைத் தவிர, வேறு என்ன செய்ய முடியும்?

ஆண்களும், தங்கள் முகங்களுக்குப் பவுடர்பூசி, 'ஸ்னோ' தடவி அழகு செய்யும் சிரமம், நேரம் இவற்றில் ஒரு சிறிதளவு 'நெற்றிக்கு இடுவதில்' செலவழித்தால் அழியாச் செல்வம் அவர்களை நாடி ஓடிவரும் என்பதை நம் இளைஞர் அறியவில்லையே என்றும் வருந்துகிறோம்.

* "A physician once told me that a large proportion of his patients did not need medicine as much as they needed God. And I recall that Tolstoy once said: 'To know God is to live'."

— Norman Vincent Peale (in *The Illustrated Weekly of India*, Oct. 9, 1960).

# கோயில் வழிபாடு

முன்னாட்களில் நம் மக்களில் பெரும்பாலோர் தாழ்வு அதிகமின்றி வாழ்ந்து வந்தனர். இதன் உண்மை என்ன? அரசர்களிடமும், மக்களிடமும் தெய்வ நம்பிக்கை பூரணமாக இருந்து வந்தது*.

அவர்கள் தங்கள் இருப்பிடங்களைச் செங்கல்லால் கட்டிக் கொண்டிருந்தனரேனும் அழியாப் பரம் பொருளாகிய ஆண்டவனுக்குக் கற்கோயில் அமைத்து வழிபட்டனர். ஜனங்கள் எல்லோரும் '' ஸத்தியமே வெல்லும் '' என்பதை உணர்ந்து உண்மைப் பாதையை விட்டு வழுவாது வாழ்ந்து வந்தனர். ஆலயங்கள் தோறும் பூஜைகள், திருவிழாக்கள் சரிவர நடைபெற்று வந்தன. கோயில்களில் அர்ச்சகர்கள் பொது மக்கள் நலத்தை உத்தேசித்து சிரத்தையுடன் ''ஸர்வேஜனா: ஸுகினோ பவந்து'' என்று மனமுருகிப் பிரார்த்தித்து வந்தனர். ஆனால் நாகரிகம் முற்ற முற்றப் பூஜையில் சிரத்தையும் ஒழுங்கும் நாளடைவில் குறையலாயின. நல்லொழுக்கத்தின் மதிப்பையும் அவசியத்தையும் மக்கள் மறக்கலாயினர். எனவே நம் நாடு பலவிதக் கஷ்டங்களால் பீடிக்கப்பட்டு இருக்கிறது.

" அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் ! "

" ஆலயம் தொழுவது சாலவும் நன்று ! "

என்பவை சான்றோரின் முதுமொழிகள்; பொன்மொழிகள். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பதால் தாயாரையும் தந்தையையும் மட்டும் தெய்வமாகக் கொண்டாட வேண்டுமென்பதில்லை. தாய் தந்தையரை

---

## VIBHISHANA'S COUNTRY SHOWS THE RIGHT WAY

Prime Minister Sirimavo Bandaranaike of Ceylon has introduced a number of new features in the island's polities. Being a simple religious minded lady, she wants to seek the guidance of God before taking any vital decision. To whatever religion her Ministers might belong, she is strongly convinced that every one of her colleagues should believe in his religion and seek the guidance of his God in every activity. It has now become a regular custom to begin every Cabinet meeting with a few minutes of silent prayer. At the first meeting of the Cabinet, the Premier is reported to have told her colleagues that one's religious life was more important than anything else and that in all deliberations, discussions and decisions they should pray for the guidance of Gods.

— "THE HINDU", 9-8-1960

மட்டுமின்றி மற்றைய பெரியோர்களையும் தெய்வமாகப் போற்றி வணங்கிக் கொண்டாட வேண்டும். அடுத்த படியாக ஆலயங்களுக்குப் போய்த் *தெய்வத்தைப் பக்தியுடன் தொழுது வரவேண்டும். இந்த இரண்டு நற் பழக்கங்களையும் நம் மக்களெல்லோரும் என்று அக்கறையுடனும் ஆர்வத்துடனும் கடைப்பிடிக்கத் தொடங்குகின்றனரோ அன்றிலிருந்து நம் நாட்டில் சுபிட்சம் பெருகும் என்பது திண்ணம்.

இக் கலிகாலத்தில் கடவுளின் கருணையைப் பெறுவது மிகச் சுலபம். மற்ற யுகங்களில் பகவானை நோக்கித் தவம் முதலியன செய்யும்போது உண்டாகும் சிரமங்கள் வெகு அதிகம்.

**கலியுகத்திலோ அவன் நாமத்தை திரிகரண சுத்தியுடன் சொன்னாலும் போதும். (அ-48-வது பக்கம் காண்க.) இதனால், அவன் அருள் என்றென்றும் நமக்குக் கிட்டும் என்று நம் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.**

அதுவும் சில சுலபமான வழிகளில் கடவுளின் பேரருளை நாம் பெற்றுச் சுகமாக வாழ்வது இந்த யுகத்தில் சாத்தியம் என்பது சத்தியம்.

அதாவது நாம் எல்லோரும் ஆலய வழிபாட்டை மீண்டும் தொடங்கி, ஒழுங்காக, உருக்கத்துடன் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து வருவது தேசத்திற்கே க்ஷேமம் தருவதாகும்.

ஆலயத்திற்குப் போகும்போது கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு, சட்டை முதலியன மேலே இல்லாமல், நெற்றிக்கு இட்டுக்கொண்டு, ஆலயம் சென்று விநயத்துடனும் பக்தியுடனும்

> **" என் அப்பனே! எங்கள் எல்லோருக்கும் நீதான் துணை;**
> **காத்தருள்க ; ஸர்வ ஆன்மாக்களையும் ரக்ஷிப்பாயாக "**

* In performing the "*Sila Vinyasa*" (laying of the foundation-stone) of *Sri Ananta Padmanabha Perumal* at Gandhi Nagar, Adyar, on 12-10-1960, His Holiness Sri Sankaracharya of Sringeri was pleased to advise the large and distinguished gathering thus:—

> "Bhagwan *alone* can fulfil man's desires. He is a *sarva-viyapi*. But, you must have some *sadkana* to seek HIS help — this *sadhana* is *Tiru-aradhana*. You must perform this sacred *aradhana* through some *roopa* (form) of the Lord and it is always preferable to have a *prathishta roopa* (idol). I, therefore, congratulate you on your efforts to construct a Temple for Lord Sri Ananta Padmanabha."

என்று மனமுருகக் கோயிலிலுள்ள மூர்த்திகளை நாம் எல்லோரும் அனுதினமும் பிரார்த்தித்து வந்தால் நம் தேசத்துக்குச் சுகமும் சுபிக்ஷமும் வெகு சீக்கிரம் ஏற்படும் என்பது சத்தியம். முக்காலும் சத்தியம்.

## விஷ்ணு கோயில்கள்

கோயிலில் சென்றதும் த்வஜஸ்தம்பம் இருக்குமானால் அதன் கீழோ, அல்லது பிரதான வாயிலின் கீழோ, ஸாஷ்டாங்கமாக, அதாவது எட்டு அங்கங்களும் பூமியில் படுமாறு, விழுந்து நமஸ்காரங்கள் செய்வது மிக முக்கியம்.

அநேகமாக, கோயிலுக்கு வெளியில் திருவடிகோயில் இருக்கும். அங்கு ஹனுமாரை ஸேவித்து விட்டுக் கோயிலில் பிரவேசிக்க வேண்டும். கோயிலுக்குள் இருக்கும் த்வஜஸ்தம்பத்திற்கு எதிரில் ஸாஷ்டாங்கமாக விழுந்து ஸேவித்து அடுத்தபடியாக ப்ரதான துவாரபாலகர்களை ஸேவித்து அனுமதி பெற்றுக் கொள்ள வேண்டும். பிறகு ஆழ்வார் ஆசார்யர் ஸந்நிதிகள் இருக்குமானால் அங்கு ஸேவிக்க வேண்டும். அப்படி ஆழ்வார் ஆசார்யர் ஸந்நிதிகள் இல்லாத சிறிய கோயில்களாக இருக்குமானால், முதலில் ஆசாரிய பூர்வாசாரியர்களை மானஸிகமாகத் தியானித்து அவர்களுடைய அனுக்கிரஹத்தைப் பெற்றுக் கொள்ளவேண்டும்.

பிறகு தாயார் ஸந்நிதிக்குச் சென்று அங்குள்ள துவாரபாலகிகளை ஸேவித்து அனுமதி பெற்றுக்கொண்டு தாயாருக்கு அர்ச்சனை முதலானவை செய்யவேண்டும்.

அதன் பிறகு, பிரதானப் பெருமாள் ஸந்நிதிக்கு எதிரிலுள்ள கருடாழ்வாரையும் துவாரபாலகர்களையும் மானஸிகமாகவாவது ஸேவித்துப் பகவானை ஸேவிக்க அனுமதியளிக்க வேண்டுமென்று பிரார்த்தித்த பிறகே, ஸந்நிதிக்குள் சென்று, ஸ்ரீய: பதியான பகவானை ஸேவிக்க வேண்டும்.

அர்ச்சனைகள் செய்து, ஆரத்திகள் செய்வித்துத் தீர்த்தம், திருத்துழாய்ப் பிரஸாதம் இவைகளைப் பெற்றுக் கொண்டு வெளியில் வருவது நலம். அர்ச்சனைகள் செய்ய முடியாவிட்டாலும் தீர்த்தம், சடாரி முதலிய பிரஸாதங்கள் கிடைக்க ஹேது இல்லாவிட்டாலும், கவலை வேண்டாம்; ஸந்நிதிகளைப் ப்ரதக்ஷிணம் செய்து, ஸேவித்தா

லுமே ஜகத்ரக்ஷகன் அருள் நமக்கு நிச்சயம் உண்டு. பிறகு சிறிது நேரம் கோயிலில் உட்கார்ந்து பகவானைச் சாந்த மாகப் பிரார்த்தித்து விட்டு பிரதானத் துவாரபாலகர் களை மறுபடியும் மானஸிகமாக ஸேவித்து உத்தரவு பெற்றுக்கொண்டு மறுபடியும் துவஜஸ்தம்பத்திற்கு எதிரில் ஸாஷ்டாங்கமாக ஸேவித்து விட்டு வெளியில் வர வேண்டும்.

## சிவன் கோயில்கள்

பொதுவாகப் பெரிய கோயில்களில் ஸ்ரீ நந்திகேசுவரர் துவஜஸ்தம்பத்திற்கு அருகிலேயே பிரதிஷ்டைசெய்யப் பட்டிருப்பார். அம்மாதிரிக் கோயில்களில் ஸேவார்த் திகள் ஸ்ரீ நந்திபகவானது வாலைப் பக்தியுடன் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டு வணங்க வேண்டும். பிறகு அங்கிருந்து கொண்டே ஸ்ரீ நந்தி பகவானுடைய கொம்பு களின் மூலம் மூலஸ்தானத்தை நோக்கித் திருமுடியைச் செலுத்தி நமஸ்கரிக்க வேண்டும். அதன் பிறகு கோயி லுக்குள் பிரவேசித்து விநாயகமூர்த்தியை நமஸ்கரிக்க வேண்டும்.

அதன் பிறகு அங்கிருந்து நேராக மூலஸ்தானம் சென்று சிவபிரானை ஸேவிக்க வேண்டும். பிறகு, அம்பாள் ஸந்நிதி தனியாக இருந்தால் அம்பாளை ஸேவித்து விட்டுப் பிறகு கோயிலிலுள்ள மற்றைய பரிவார தேவதைகளை வணங்க வேண்டும். கடைசியில் சண்டிகேசுவரரைத் துதிசெய்து விடைபெற்றுக்கொண்டு வெளியில் வரவேண்டும்.

பிரதானக்கோயிலில், நந்தி பகவானோ துவஜஸ்தம் பமோ இல்லாத கோயில்களில் முதலில் தும்பி முகத் தோனைத் துதி செய்ய வேண்டும். பிறகு மேற்கூறிய விதம் கோயிலின் உட்சென்று ஸ்ரீநந்தி பகவான் முதலிய ஸந்நிதிகளில் வழிபாடு செய்யவேண்டும்.

மதுரை மீனாக்ஷியம்மன் கோயில், திருநெல்வேலி காந்தி மதியம்பாள் கோயில் போன்ற கோயில்களில், அம்பாள் கோயிலுக்குச் சென்று அங்குள்ள ஸ்ரீ விநாயக மூர்த்தியை வணங்கி விட்டு, பிறகு ஸ்ரீ அம்பாளைத் துதி செய்து பிறகேதான் ஸ்ரீ நந்திபகவான், சிவபிரான் முதலி யவர்களை நமஸ்கரிக்கவேண்டும்.

## ஸ்தோத்திரமாலை

மேற்கூறிய வண்ணம் கோயிலில் சென்று வழிபடும் பொழுது பகவானிடம் மனத்தைச் செலுத்தித் துதி செய்ய இந்து சமயத்தைச் சேர்ந்த எல்லாச் சமயத்தினர்க்கும் உதவி செய்யும் நோக்கத்துடன் ஸ்தோத்திரமாலை என்னும் இப்பகுதியை இப்புத்தகத்தில் சேர்த்துள்ளோம். சைவ வைஷ்ணவ சமயத்தினரின் இஷ்டதேவதைகளான மூர்த்திகளின் ஸ்தோத்திரங்களும் நாமாவளிகளுடன் அநேகமாக இதில் இடம் பெற்றுள்ளன.

தவிர, கோயில்களில் சென்று வழிபடும் பொழுது மட்டுமல்லாமல் சில முக்கியப் பண்டிகை தினங்களில் குறிப்பிட்ட தேவதைகளுக்குப் பூஜை செய்ய வேண்டிய அவசியமேற்படுவதுமுண்டு. உதாரணமாக விநாயக சதுர்த்தியன்று ஸ்ரீ விநாயகமூர்த்தியையும் ஸரஸ்வதி பூஜையன்று ஸ்ரீ ஸரஸ்வதி தேவியையும் வீட்டிலேயே பூஜை செய்கிறோம். அம்மாதிரிப் பண்டிகை தினங்களில் பூஜையைச் செய்வித்து வைக்க வேண்டிய புரோகிதர்கள் வரத் தவறினாலோ, நேரமானாலோ, குடும்பஸ்தர்கள் தாங்களாகவே பூஜை செய்வதற்கு உதவியாயிருக்க வேண்டும் என்பது இப்புத்தகத்தை வெளியிடுவதன் மற்றொரு நோக்கமாகும்.* எனவே, ஒரு வருஷத்தில் சாதாரணமாக என்னென்ன பண்டிகை வரும் என்பதை யோசித்து, அப்பண்டிகை தினங்களில் எந்தெந்த தேவதைகளைப் பூஜிக்க வேண்டுமோ அந்தந்த தேவதைகளின் புகழைப் பாடும் ஸ்தோத்திரங்களையும் நாமாவளிகளையும் கூடிய வரையில் இப்பகுதியில் சேர்த்துள்ளோம்.

— **கீழாத்தூர் ஸ்ரீனிவாஸாச்சாரியார்,** P.O.L.,
*ந்யாயசிரோமணி, ஹிந்தீவிசாரத.*
*பரீக்ஷாமந்திரி, ஸம்ஸ்கிருத பாஷா ப்ரசாரிணீ ஸபா, சித்தூர்.*

**பதிப்பாசிரியர்.**

---

* **முக்கியம்:** கூடியவரை முக்கிய தினங்களில், புரோஹிதர்களை அண்டி, அவர்கள் மூலம் பூஜை செய்து, அவர்கட்கு ஸம்பாவனை செய்து அவர்களை நமஸ்கரித்துக்கொள்வதே, நலம்.

## நவக்கிரஹ க்ஷேத்திரங்கள்

ஆதித்யாய ச ஸோமாய மங்களாய புதாய ச |
குரு சுக்ர சநிப்யஸ்ச ராஹவே கேதவே நம: ||

இலக்கியங்கள் அவ்வக்காலத்து வாழ்க்கையை விளக்கிக் காட்டும் கண்ணாடிகள் என்பர் பெரியோர். ஸ்ரீமத் ராமாயணம் ஸ்ரீ ராமபிரானுடைய வாழ்க்கைக் கண்ணாடியேயாகும் என்றால் அது மிகையாகாது. சாதாரணக் கண்ணாடியில் எதிரில் உள்ள உருவங்கள் மட்டுமே தெரியும். இலக்கியக் கண்ணாடியோ நெடுங்காலத்துக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் நாம் நினைக்கும்போதே நம் கண் எதிரில் தெளிவாகக் கொணர்ந்து காட்டும். இவ்வாறு முற்பிறவியில் நிகழ்ந்த நல்வினை தீவினைகளை அறிவிப்பதும், தீவினையைப் போக்குதற்கு வேண்டிய பரிஹாரங்களைச் செய்து மக்கள் உய்யும் வழியை விளக்குவதுமாகிய கண்ணாடியே சோதிட நூலாகும்.

ஸூரியன் முதலிய ஒன்பது கிரஹங்களின் கதிகள் சோதிட நூல்களில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. ஸூர்யனால் அடையும் நன்மைகளை நாம் நாள்தோறும் கண்கூடாகக் காண்கின்றோம் அல்லவா! ஸூர்யன் காலையில் தோன்றி நண்பகலில் உச்சநிலையடைந்து மாலையில் மறைவதன் மூலம் தோற்றமும் இறப்பும் அனைவர்க்கும் உண்டு என்பதைத் தினமும் நினைவுபடுத்துகிறான். இவ்வாறே, மற்ற கிரஹங்களும் பகவானுடைய பிரதிநிதிகளாக இருந்து மக்களுக்கு அவரவர்க்கு உரிய நன்மை தீமைகளை அளித்து வருகின்றன. நவக்கிரஹங்களாகிய ஒன்பது கயிறுகளின்மூலம் உலகத்து உயிர்களாகிய பதுமைகளை ஆட்டிவைக்கும் பொம்மலாட்டக்காரன் (உலக நாடக ஸூத்ரதாரி) பகவானே எனலாம்.

உலகம் முழுவதும் ஜாதி, மத, இன, நெறி, மொழி, வேறுபாடின்றி உய்யவே இந்த ஒன்பது கிரஹங்களையும் இறைவன் அருளியிருக்கிறார்.

**இக்கருத்துக்களை மனத்திற்கொண்டே இறைவனைப் பிரதிஷ்டை செய்த ஆலயங்களிலெல்லாம் நவக்கிரஹங்களையும் நம் முன்னோர் பிரதிஷ்டை செய்துள்ளனர்.**

எனினும், நவக்கிரஹங்கள் நம் நாட்டில், **எட்டு முக்கிய க்ஷேத்திரங்களில்** மூலஸ்தான மூர்த்தங்களுடன் சேர்த்தே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. அவை யந்திர ரூபமாகவும், தத்தம் காயத்ரீ மந்திர ரூபமாகவும், அவ்வவ்விடங்களில் நித்யவாஸம் செய்து, அந்தந்த க்ஷேத்திர மூர்த்திகளைத் தரிசிப்போரின் கஷ்டங்களை நீக்கி இன்பத்தை அளிக்கின்றன என்று நம் புராதனக் கிரந்தங்களில் இருப்பதாக **ஸர்வ ஜனங்களுடைய க்ஷேமங்களை உத்தேசித்து 'ஆனந்த விகடன்' (1960) தீபாவளி மலரில் மிக அழகாகப் பிரசுரித்துள்ளார்கள்.**

இந்த எட்டு திவ்ய ஸ்தலங்களின் விவரங்களும், அந்தந்த க்ரஹத்திற்கான காயத்ரியும், அடுத்த பக்கத்தில் தந்திருக்கிறோம். பக்தர்கள், ஸாத்யமான ஸமயங்களில், இந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்று இந்த மூர்த்திகளைத் தரிசனம் செய்து வருவது நலம்.

தவிர, **'ஆனந்த விகடன்' (1960) தீபாவளி மலரில்,** இந்த எட்டு மூர்த்திகளையும், கண்ணையும் கருத்தையும் கவர்ந்து பக்தி நெறி பெருகும் வகையில் மிக அழகாக அச்சிட்டிருக்கிறார்கள். பக்தர்கள் தினமும், இந்தத் தீபாவளி மலர் மூலம், அம்மூர்த்திகளைப் பூஜித்து, நவக்ரஹ காயத்ரீயையும் ஜபித்து வந்தால், அவர்கள் ஸகல க்ஷேமங்களையும் அடைவார்கள்.

**சுபம்! சுபமே!!**



| கிரஹம் | க்ஷேத்திரம் | மூர்த்தி | காயத்ரீ |
| --- | --- | --- | --- |
| ஸூரியன் | ஸூரியனூர் கோவில் (ஆடுதுறை அருகில்- தஞ்சை ஜில்லா) | ஸ்ரீசிவஸூரிய நாராயண ஸ்வாமி | அச்வ த்வஜாய வித்மஹே,<br>பாச ஹஸ்தாய தீமஹி \|<br>தந்நஸ் ஸூர்ய: ப்ரசோதயாத் \|\| |
| சந்திரன் | திருப்பதி | ஸ்ரீ வேங்கடாசலபதி | பத்ம த்வஜாய வித்மஹே,<br>ஹேம ரூபாய தீமஹி \|<br>தந்நஸ் ஸோம: ப்ரசோதயாத் \|\| |
| செவ்வாய் | பழநி | ஸ்ரீ தண்டாயுதபாணி | வீர த்வஜாய வித்மஹே,<br>விக்ந ஹஸ்தாய தீமஹி \|<br>தந்நோ பௌம: ப்ரசோதயாத் \|\| |
| புதன் | மதுரை | ஸ்ரீ சொக்கநாதர் | கஜ த்வஜாய வித்மஹே,<br>சுக ஹஸ்தாய தீமஹி \|<br>தந்நோ புத: ப்ரசோதயாத் \|\| |
| குரு | திருச்செந்தூர் | ஸ்ரீ பால ஸுப்ரஹ்மண்யம் | வ்ருஷப த்வஜாய வித்மஹே,<br>க்ருணி ஹஸ்தாய தீமஹி \|<br>தந்நோ குரு: ப்ரசோதயாத் \|\| |
| சுக்கிரன் | ஸ்ரீரங்கம் | ஸ்ரீ ரங்கநாதர் | அச்வத்வஜாய வித்மஹே,<br>தநுர் ஹஸ்தாய தீமஹி \|<br>தந்ந: சுக்ர: ப்ரசோதயாத் \|\| |
| சனி | திருநள்ளாறு (காரைக்கால் அருகில்-தஞ்சை ஜில்லா) | ஸ்ரீ சனி பகவான் | காக த்வஜாய வித்மஹே,<br>கட்க ஹஸ்தாய தீமஹி \|<br>தந்நோ மந்த: ப்ரசோதயாத் \|\| |
| ராஹு<br>கேது | ஸ்ரீ காளஹஸ்தி | ஸ்ரீ காளஹஸ்தீச்வரர் | நகத்வஜாய வித்மஹே,<br>பத்மஹஸ்தாய தீமஹி \|<br>தந்நோ ராஹு: ப்ரசோதயாத் \|\|<br>அச்வ த்வஜாய வித்மஹே,<br>சூலஹஸ்தாய தீமஹி \|<br>தந்ந: கேது: ப்ரசோதயாத் \|\| |



# GOD'S NAME IS GREATER THAN GOD

(Please See Page அ-41)

Let anyone accept any *sadhana*, he is free to follow its pursuit.

But to me Thy Name is the graater of all boons.

The various paths outlined in the Vedas for the emancipation from *karma*, *upasana* and *gyan* are all good,

But I seek only one shelter and that is Thy Name, I seek nothing besides,

Alas! I had wasted all these years on other things like a dog rushing from one place to another,

But now, having enjoyed the sweet bliss of Thy Name, I cast not my glances elsewhere,

It is the fulfiller of my wishes here and in the world to come.

Has not Thy Name, O Lord, made the very stones swim in the ocean and also helped the monkeys to cross the waters?

A man may have his affection revetted anywhere as also his faith,

But I recognise only my relationship with the NAME—Rama—It is my father and my mother,

I swear by Shankara and state the Truth without hiding it,

That Tulsidas sees all good ac-ruing to him only by repeating Thy Name.

Why should I care for you, Oh God! when Thy Name is powerful enough to save the devotee from any calamity in life?

When the elephant king, caught up by the crocodile, was sending up its prayer to God, was it not Thy primordial Name that saved it from death?

When Prahlada was being harassed by his father in many ways, was it not the name of Narahari that protected him?

When the young lady, Draupadi, was being stripped of her clothes in the open assembly of the Kauravas and Pandavas, was it not the name of Krishna that saved her honour?

When the messengers of death were dragging the most sinful Ajamila, was it not the name of Narayana that saved him?

When Valmiki, the sinful and barbarous dacoit was uttering 'this Mara and that Mara' (this tree and that), was it not the inverted order of his utterances, embodying the name of 'Rama', that came to his help, and saved him?

When the young child Dhruva was entering the forest for performing penance, was it not the name of Vasudeva that saved him?

**There is no parallel, nothing in the world equal to Your Name, Oh, Purandara-Vithala! Your Name is really greater than yourself.**

— TULSIDAS PURANDARADAS.

— *With grateful acknowledgments to* "THE BHAVAN'S JOURNAL", Oct. 16, 1960.





ஜபாகுஸுமஸங்காசம் காச்யபேயம் மஹாத்யுதிம் |
தமோரிம் ஸர்வபாபக்னம் ப்ரணதோஸ்மி திவாகரம்




























ஆதித்யாய ச ஸோமாய மங்களாய புதாய ச |
குரு சுக்ர சநிப்யஸ்ச ராஹவே கேதவே நம: ||

# சந்திர தசை

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## ஸுந்தர காண்டம் — 5-வது ஸர்க்கம் ★

## சந்த்ரோதய வர்ணனை

ததஸ்ஸ மத்யம் கதமம்சுமந்தம்
ஜ்யோத்ஸ்னா விதானம் மஹதுத் வமந்தம் ।
ததர்ச தீமான் திவி பானுமந்தம்
கோஷ்ட்டே வ்ருஷம் மத்தமிவ ப்ரமந்தம் ॥ (1)

பிறகு அளவற்ற காந்தியுள்ள சந்திரன் ஸகல திக்குகளிலும் நிலவைப் பரவச் செய்துகொண்டு, பசு மந்தையில் யதேச்சையாக உலாவும் மதங்கொண்ட காளையைப்போல் ஆகாசத்தின் நடுவில் பிரகாசிப்பதை மஹாபுத்திமானான மாருதி பார்த்தார். ஸகல பிராணிகளுக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பதால் சந்திரன் பாபங்களின் பலனான துக்கத்தை அழிப்பவர் ; கடலைப் பொங்கச் செய்பவர். ஸகல பிராணிகளையும் விளங்கச் செய்பவர் ; இவ்விதமான சந்திரன் ஆகாசவீதியில் போய்க்கொண்டிருப்பதை ஹனுமான் கண்டார். லோகத்தில் மந்திர பர்வதமும், பிரதோஷ காலத்தில் ஸமுத்திரமும், தடாகங்களில் செந்தாமரையும் மிகுந்த காந்தி பெற்று விளங்குவதுபோல், சந்திரனிடத்தில் காந்தியும் தேஜஸும் விசேஷமாக விளங்கின. நிலவால் வெளுத்த ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதால் வெண்மையான காட்டில் விளையாடும் ராஜ ஹம்ஸத்தைப் போலும், வெண்மையான மந்தரகிரியின் குகையிலிருக்கும்

---

★ சந்திர தசை இருக்கும்வரை தினமும் இந்த ஸர்க்கத்தை முதலில் பாராயணம் செய்தபிறகே அந்தந்த புக்திக்குரிய பகுதியைப் பாராயணம் செய்ய வேண்டும்.

தார். ஆனால் நிகரில்லாத ரூபவதியாகித் தர்ம மார்க்கத்தை விட்டு நழுவாத ஜனக மஹாராஜனுக்குப் புத்திரியாகப் பிறந்து, நன்றாக வளர்ந்து புஷ்பங்களால் விளங்கும் கொடியைப்போல் லாவண்ய முடையவளாகி, லோகநாதனான ராமனுக்குத் தகுந்த அற்புதமான ரூபத்துடன் அவதரித்த ஸீதையை மாத்திரம் காணவில்லை. அனாதி காலமாகவுள்ள பதிவிரதா தர்மத்தை அனுஷ்டித்து, ராமனைப் பார்க்காமல் உயிர்வைத்துக் கொள்வதில்லையென்று நிச்சயித்து, அவரிடத்தில் நீங்காத ஆசைகொண்டவளாகி, லக்ஷ்மீ ஸமேதரான அவருடைய மனதிலேயே குடி புகுந்தவளாகி, உத்தம ஸ்த்ரீகளுக்குச் சிரோமணியாக விளங்கும் ஜானகியை மாத்திரம் காணவில்லை. விரகாக்னியால் கொளுத்தப்பட்டு, இடைவிடாமல் பெருகும் கண்ணீர் நெஞ்சையடைக்க, முன்பு ராமனுடன் ஸுகமாக வஸிக்கும்பொழுது விலையற்ற ச்ரேஷ்டமான ஹாரங்களை அணிந்து, ஸந்தோஷத்தால் இமைமயிர் மலர்ந்து, குயில் போன்ற இனிமையான குரலுடன், வனத்தில் மேகத்தைக் கண்டு ஆனந்தத்தால் தோகையை விரித்தாடும் மயிலைப்போன்ற ஜானகியை மாத்திரம் காணவில்லை. மங்கின கிரணங்களையுடைய சந்திரனைப்போல் இளைத்து, புழுதிபடிந்த தங்கப்ரதிமையைப்போல் அழுக்கடைந்து, அம்பு பாய்ந்த காயம் மேலே மாத்திரம் ஆறி உள்ளே அம்பும் புண்ணுமிருந்து உபத்திரவிப்பதுபோல் துக்கமென்ற நெருப்பு ஹ்ருதயத்திலெரிக்கப் பெருங்காற்றாலடிக்கப்பட்டுச் சிதறின மேகங்களைப்போல், தன்னெண்ணங்களெல்லாம் பாழான ஸீதையை மாத்திரம் பார்க்கவில்லை. நெடுநேரம் தேடியும், லோகநாதனும் பேசும் திறமையுள்ளவர்களுக்குள் ச்ரேஷ்டனுமான ராமனுடைய தர்ம பத்தினியைக் காணாமல் புத்தி மயங்கினவனைப் போல் மிகுந்த கவலை கொண்டார்.

ஸீதா மபச்யன் மனுஜேச்வரஸ்ய
ராமஸ்ய பத்நீம் வததாம் வரஸ்ய |
பபூவ துக்கா பிஹதஸ்சிரஸ்ய
ப்லவங்கமோ மந்த இவாசிரஸ்ய || (27)



# சந்திர புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## உத்தர காண்டம் — 53, 54-வது ஸர்க்கங்கள்

### 53-வது ஸர்க்கம்

### நிருகனுடைய சரித்திரம்

லக்ஷ்மணஸ்ய து தத்வாக்யம் நிசம்ய பரமாத்புதம்
ஸுப்ரீதஸ்சாபவத் ராமோ வாக்யமேத துவாச ஹ (1)

லக்ஷ்மணனுடைய வைராக்கியகரமான வார்த்தைகளால் ராமன் திருப்தியடைந்து, "குழந்தாய்! இப்படி எனக்குத் துக்கங்கள் நேருங்காலத்தில், உன்னைப்போல் சொன்ன சொல்லைத் தவறாமல் பரம ஹிதத்தை உபதேசிக்கும் பந்து கிடைப்பானோ? என் எண்ணத்தை அறிந்து, அதன்படி நடக்கிறவன் நீயே. ஆனால் ஒரு விஷயம் மாத்திரம் எனக்கு விசேஷ வருத்தத்தைக் கொடுக்கிறது. அதைச் சொல்லுகிறேன், கேட்டு என் எண்ணத்தை நிறை வேற்றுவாய். நான்கு தினங்களாய் பிரஜைகளின் விஷயங்களை நான் கவனிக்கவில்லை. அது என் ஹிருதயத்தைப் பிளக்கிறது. ஆகையால் வஸிஷ்டரையும் மந்திரிகளையும் ராஜ்ய உத்தியோகஸ்தர் களையும் என்னிடத்தில் கார்யமுள்ள ஸ்த்ரீ புருஷர்களையும் கூப்பிடு. நகரத்துக் கார்யங்களை ஒவ்வொரு நாளும் பாக்கியில்லாமல் பார்த்து முடிக்காத அரசன் கோரமான நரகத்தில் விழுகிறான்.

"முன் காலத்தில் நிருகனென்று ஓர் அரசனிருந்தான். மஹா கீர்த்திசாலி ; ஸத்தியம் தவறாதவன் ; சுத்தன் ; பிராம்மணர் களிடத்தில் சிரத்தையுள்ளவன். ஒருக்கால் புஷ்கரமென்ற புண்ய தீர்த்தத்தில் பிராம்மணர்களுக்குத் தங்கத்தால் நன்றாய்

அலங்கரிக்கப்பட்ட கோடி பசுக்களையும் கன்றுகளையும் தானஞ் செய்தான். அவைகளில் ஒரு பிராம்மணனுடைய பசுவும் கன்றும் கலந்து விட்டன. அவர் வெகு தரித்திரர்; அக்னிஹோத்ரி; வயல்களில் சிந்திக்கிடக்கும் நெல்லுகளைப்பொறுக்கி ஜீவனஞ் செய்கிறவர்; பசியால் மெலிந்து, வைதிக கர்மங்களுக்கு ஸாதன மில்லாமல், தன் பசுவையும் கன்றையும் தேடிக்கொண்டு அநேக வருஷங்கள் வரையில் எல்லா தேசங்களிலும் அலைந்து திரிந்தார். பிறகு கனகலமென்ற கிராமத்தில் ஒரு பிராம்மணனுடைய வீட்டில் தன் பசுவும் கன்றும் ஸௌக்யமாயிருக்கக் கண்டார். 'சபலே! வா' என்று அவர் அழைத்தவுடன் அது அவருடைய குரலைக் கண்டு பிடித்து தேஜஸால் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் அந்த பிராம் மணனைப் பின்தொடர்ந்தது. அதைத் தானம் வாங்கின பிராம்மணனும் அதைப் பின்தொடர்ந்து 'ஸ்வாமி! நிருக மஹாராஜா இதை எனக்குத் தானமாகக் கொடுத்தார். ஆகையால் இது எனது' என்றார். மற்றவர் 'அதெப்படி? இது எனதே. நான் கூப்பிட்டவுடன் என் குரலையறிந்து வந்ததைப் பார்க்க வில்லையா?' என்றார். இப்படி இருவரும் விவாதஞ்செய்து கொண்டு நிருகனிடத்தில் வந்தார்கள். அனேக தினங்கள் வரையில் இராப்பகலாய் அரண்மனைவாசலில் காத்துக்கொண்டிருந்தும் அரசனைப் பார்க்க முடியவில்லை. பிறகு கோபங்கொண்டு, 'உன் னிடத்தில் கார்யமாய் வந்தவர்களை நீ பார்த்து அவர்களுக்கு வேண்டியதைச் செய்யாமல் அந்தப்புரத்தில் மறைந்திருக்கிறாய். ஆகையால் ஸகல பிராணிகளாலும் பார்க்கமுடியாமல் ஓணாய்ப் பதினெட்டு சதுர்யுகங்களைக் கழிப்பாய். பிறகு பகவான் நர நாராயண ரூபியாய்ப் பூபாரத்தைத் தீர்ப்பதற்காக யதுகுலத்தில் அவதரிப்பார். அவரால் உனக்கு இந்தச் சாபம் விலகும்' என்று கோரமான சாபத்தைக் கொடுத்து, வயது சென்ற அந்தப் பசுவை வேறொரு பிராம்மணனுக்குத் தானம் செய்து தங்களிருப்பிடஞ் சென்றார்கள்.

"அந்த ராஜா இன்னும் அந்த சாபத்தை அனுபவித்துக்கொண் டிருக்கிறான். அரசனிடத்தில் கார்யமாய் வந்தவர்களை அலக்ஷ்யஞ் செய்வதால் மஹாதோஷமுண்டாகும். ஆகையால் என்னிடத்தில் கார்யமுள்ளவர்கள் சீக்கிரத்தில் இங்கே வரட்டும். 'நிருகனென்ற அரசனுக்கே அப்படிக் கஷ்டம் நேர்ந்தால், நாம் புண்ய கர்மத்தைச் செய்தும் பிரயோஜனமில்லை' என்று நீ சொல்லக்கூடாது;

பிரஜைகளைத் தர்ம்மாய்ப் பாலனஞ்செய்வதால் அரசனுக்கு அளவற்ற புண்ணியம் கிடைக்கிறதல்லவா? ஆகையால் அரண்மனை வாசலில் போய் என்னிடத்தில் கார்யமுள்ளவர்கள் யாராவது வருகிறார்களாவென்று பார்த்து அழைத்து வா" என்றார்.

ஸுக்ருதஸ்ய ஹி கார்யஸ்ய பலம் நாபைதி பார்த்திவ :
தஸ்மாத் கச்ச ப்ரதீக்ஷஸ்வ ஸௌமித்ரே கார்யவாஞ்ஜன: (22)

## 54-வது ஸர்க்கம்

(தொடர்ச்சி)

ராமஸ்ய பாஷிதம் ச்ருத்வா லக்ஷ்மண : பரமார்த்தவித்
உவாச ப்ராஞ்ஜலிர் வாக்யம் ராகவம் தீப்ததேஜஸம் (1)

ராமன் இப்படிச் சொல்ல லக்ஷ்மணன் கைகூப்பி வணக்கமாய், "ஸ்வாமி! நிருகன் செய்த அபராதம் ஸ்வல்பம்; பிராம்மணர்கள் கொடுத்த சாபமோ யமதண்டத்தைப்போல் மஹா கோரமானது. அதைக் கேட்டு அந்த அரசன் என்ன சொன்னான்? என்ன செய்தான்?" என்றார். ராமன், "அவர்கள் திடீரென்று மறைந்தார்கள். நிருகன் அதைக் கேட்டுச் சற்று ஆலோசித்து, அவர்கள் இன்னாரென்றறிந்து, மந்திரிகளையும் புரோஹிதர்களையும் ஜாதித் தலைவர்களையும் அழைத்து வெகு துக்கத்துடன், 'பிரஜைகளே! கேளுங்கள். நாரதர் பர்வதரென்ற மஹரிஷிகள் என்னிடத்திற்கு வந்து, இரண்டு பிராம்மணர்கள் என்னிடத்தில் கோபங்கொண்டு, வெகு காலம் நான் ஓணானாயிருக்கும்படி சபித்திருக்கிறார்களென்று தெரிவித்து, வாயுவேகமாய் பிரம்மலோகம் போனார்கள். வஸு வென்ற என் புத்திரனை எனக்குப் பதிலாக அபிஷேகஞ்செய்யுங்கள். மழைக் காலத்திலும் பனிகாலத்திலும் கோடைகாலத்திலும் நான் வஸிக்கத்தகுந்த மூன்று பள்ளங்களைத் திறமையுள்ள சிற்பிகள் உண்டாக்கட்டும். ருசியுள்ள பழங்களால் நிறைந்த மரங்களும் புஷ்பங்களால் விளங்கும் செடி கொடிகளும் நிழலுள்ள மரங்களும் நான்கு புறங்களிலும் அரையோஜனை தூரம் வரைக்கும் பயிராக்கப் படட்டும்' என்று ஆக்ஞாபித்துத் தன் புத்திரனை வஸுவைப் பார்த்து, 'பிரஜைகளை க்ஷத்திரிய தர்மப்படி பரிபாலனஞ்செய். நான் அந்த விஷயத்தில் அஜாக்கிரதையாயிருந்ததால் அற்ப அபராதத்திற்குக் கோரமான தண்டனை கிடைத்ததைப் பார்த்தா

யல்லவா? எனக்காக வருத்தப்படாதே. தெய்வகதியை யாரால் தடுக்கமுடியும்? ஸுக துக்கங்களை அந்தந்த ஸமயங்களில் அதே கொடுக்கிறது. நாமிருக்குமிடத்திலேயே நமது பிரயத்தனமில்லாமல் ஸுகதுக்கங்கள் நேருவதும், நாம் வேறிடங்களுக்குப்போய் அவைகளை அனுபவிப்பதும், நாமிருக்குமிடத்திலேயே நமது பிரயத்தனத்தால் அவை கிடைப்பதும் பூர்வ ஜன்மங்களில் செய்த கர்ம பலன்களே. ஆகையால் வருத்தப்படாதே' என்று அவனை ஸமாதானம் செய்து, தனக்காக அமைக்கப்பட்ட பள்ளத்தில் வஸிக்கப் போனான். மஹாரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்தப் பள்ளத்தில் பிரவேசித்து, பிராம்மணர்களால் தனக்குக் கிடைத்த சாபத்தை அனுபவித்துக் கொண்டிருந்தான்'' என்றார்.

ஏவம் ப்ரவிச்யைவ ந்ருபஸ்ததானீம்
ச்வப்ரம் மஹாரத்னவிபூஷிதம் தத் |
ஸம்பாதயாமாஸ ததா மஹாத்மா
சாபம் த்விஜாப்யாம் ஹி ருஷா விமுக்தம் || (18)



சந்திர தசை

# குஜ புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## பால காண்டம் — 19, 20, 21, 22-வது ஸர்க்கங்கள்

### 19-வது ஸர்க்கம்

### "ராமனை அனுப்பும்"

தச்ச்ருத்வா ராஜஸிம்ஹஸ்ய வாக்ய மத்புதவிஸ்தரம்
ஹ்ருஷ்டரோமா மஹாதேஜா விச்வாமித்ரோ ப்யபாஷத (1)

ராஜச்ரேஷ்டரான தசரதர் சொன்ன ஆச்சரியகரமான வார்த்தைகளைக் கேட்டு எல்லையற்ற தேஜஸையுடைய விச்வாமித்திரர் ஸந்தோஷத்தால் தேகம் புளகித்து, "மஹாராஜா! இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் மஹா குலத்தில் பிறந்து வஸிஷ்டரால் ஒவ்வொரு காரியத்திலும் உபதேசிக்கப் பெற்ற உமக்கே இந்த வார்த்தைகள் தகும். வேறொருவர்க்கும் தகாது. நான் எண்ணியிருப்பதை முடிப்பதாய் நிச்சயஞ் செய்யும். ராஜச்ரேஷ்ட! பிறகு தவறக் கூடாது. சில பலன்களை உத்தேசித்து நான் ஒரு யாகஞ் செய்ய ஆரம்பித்தேன். அது முடியும் ஸமயத்தில் சுபாகு மாரீசனென்ற இரண்டு ராக்ஷஸர்கள் அங்கே வந்து மாமிசத்தையும் ரத்தத்தையும் அக்னி குண்டத்தில் வர்ஷித்து யாகத்தைக் கெடுத்து விட்டார்கள். அவர்களோ மஹா வீரர்கள்; யுத்தங்களில் தேர்ந்தவர்கள். நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவர்கள். இப்படிப் பல தடவை நடந்து என் சிரமமெல்லாம் வீணாகி, உத்ஸாஹம் குறைந்து அவ்விடத்தைவிட்டு வந்தேன். யாக காலத்தில் சபிக்கக் கூடாதென்று ஏற்பட்டிருப்பதால் அவர்களை நானே சிக்ஷிக்க முடியவில்லை. மறுபடியும் யாகஞ் செய்யப் போகிறேன். அதை ரக்ஷிக்க உமது மூத்த புத்திரனான ராமனை என்னுடன் அனுப்பும். அவன்

